..LKI 22.6.2003 ரூ.6.00

கல்கி



–ஸ்ரீ ஸ்ரீ ரவிசங்கர்
அருளும்

# அன்பின் ஊற்று

சின்னஞ்சிறு சிந்தனைகள்–புத்தம் புதிய தொடர்

# வாழ்க நலமுடன்







வருகிறது

# கல்கி மருத்துவ மலர்

விலை ரூ. 20/-

தபால் அல்லது கூரியர் மூலம் பெற ரூ. 10/- சேர்த்து கல்கி முகவரிக்கு அனுப்பவும். அல்லது உள்ளூர் ஏஜெண்டிடம் உடனே பதிவு செய்து கொள்ளவும்.

அஞ்சலி

# விளம்பரம் விரும்பாதவர்!

சரக்குப் போக்குவரத்து நிறுவனம் ஒன்று.. அதற்குச் சிறப்பாக விளம்பரம் தயாரித்து வெளியிட வேண்டும் என்று ஆர்.கே. சுவாமி நிறுவனத்தை அணுகினார்கள்.

"பல டிரான்ஸ்போர்ட் நிறுவனங்கள் நம்பகமாகச் செயல்படவில்லை என்கிற நிலைமையில், வாடிக்கையாளர்களை எப்படி ஈர்ப்பது...? நிறுவனத் தலைவர் ஆர்.கே.சுவாமி சிறிது யோசனை செய்தார்.. பிறகு சுமார் ஐம்பது செங்கல்களை எடுத்து வரச் சொல்லி அவற்றை ஓர் அட்டைப் பெட்டியில் அடுக்கி 'பேக்' செய்தார். இதே போல் பல செங்கல் பார்சல்கள் தயாராயின. ஒவ்வொன்றையும் ஒவ்வொரு டிரான்ஸ்போர்ட் நிறுவனம் மூலம் ஒரே விலாசத்துக்கு அனுப்பினார். ஒவ்வொரு நிறுவனமும் ஒவ்வொரு கட்டணம் வசூலித்தது! செங்கற்கள் பத்திரமாகப் போய்ச் சேர்ந்தனவா என்றும் சரி பார்த்தார். சரக்குக் கட்டணம், கற்கள் சென்று சேர்ந்த நிலை என்ற தகவல்களை உள்ளடக்கி, கம்பெனி வாரியாகப் பட்டியலிட்டு விளம்பரம் தயாரித்தார். 'இந்தக் கம்பெனிகள் எல்லாம் இத்தனை பணம் வாங்கியுள்ளன. எங்கள் நிறுவனம் வசூலிப்பது இன்ன கட்டணம்' என்று ஒப்பு நோக்கும் வகையில் உண்மையைப் பிட்டு வைத்த அந்த விளம்பரம் பெரிய பரபரப்பை ஏற்படுத்தியது."

சமீபத்தில் காலமான விளம்பரத் துறையின் பீஷ்ம பிதாமகர் ஆர்.கே.சுவாமியைப் பற்றிய இச்சம்பவத்தை விவரித்தவர் அவரோடு கால் நூற்றாண்டுக் காலம் பழகிய நண்பர் ராமன்.

"இன்றைக்குப் புதுப் புது யுக்திகளைப் பயன்படுத்திச் செய்யப்படும் விளம்பரங்க


• ஆர்.கே.சுவாமி



• ராமன்



•வேங்கடசுப்ரமணியம்.

...ளுக்கெல்லாம் முன்னோடி ஆர்.கே.சுவாமியின் படைப்புகள் தான்'' என்கிறார் ராமன். "நம் நாட்டில் பொதுத் துறை நிறுவனங்களுக்கும் விளம்பரம் தேவை என்று முதன் முதலாகச் சொல்லி, ஒரு திருப்பத்தை ஏற்படுத்தியவர் சுவாமிதான். மிக எளிமையானவர். நிறைய கோவில்களில் சீரமைப்புப் பணிகள் நடக்க உதவியிருக்கிறார்..''

"இருபத்தைந்து ஆண்டுகள் அவரிடம் பணியாற்றினேன். ஒவ்வொரு முறை அவரைச் சந்தித்தபோதும் புதிதாக ஏதேனும் கற்றுக் கொள்ள நேர்ந்தது'' என்கிறார் எல். வேங்கடசுப்ரமணியம். இவர் தற்போது ஆர்.கே. சுவாமி நிறுவனத்தின் சீனியர் வைஸ் பிரெஸிடெண்ட் (பைனான்ஸ்).

"துணிவு, மன உறுதி, அர்ப்பணிப்பு – இவை மூன்றும் அவர் வெற்றியின் ரகசியங்கள். துணிந்து அறிவு பூர்வமாக முடிவு எடுப்பார். என்ன சோதனை வந்தாலும் முடிவில் உறுதியாய் இருந்து அர்ப்பணிப்பு உணர்வோடு உழைப்பார்.

"கணக்கு வழக்குகளை நிமிடமாக ஒரகித்துக் கொள்வார். விளம்பரக் கலை முதல் ஜோதிட சாஸ்திரம் வரை பல விஷயங்களில் ஆர்வம் உள்ளவர். நிறைய தொழிலதிபர்கள் வந்து அவரிடம் ஆலோசனைப் பெற்றுப் போவார்கள்.

"ஆங்கிலத்தில் அற்புதமாக எழுதுவார். கடிதம் எழுதியே பெரும்பாலான சிக்கல்களைத் தீர்த்து விடுவார்... எளிமையாய், எல்லோரும் அணுகக் கூடியவராய் இருந்தார். அவர் மறைவு விளம்பர உலகில் ஒரு வெற்றிடத்தை ஏற்படுத்தியுள்ளது. என் சொந்த வாழ்விலோ ஒரு தந்தையை இழந்த துயரம் சூழ்கிறது'' என்கிறார் எல். வேங்கடசுப்ரமண்யம்.

ஊருக்கெல்லாம் விளம்பரம் தயாரித்தவர், இறுதிவரை தம்மை விளம்பரப்படுத்திக் கொள்ளாமல் வாழ்ந்து, தமக்கும் தமது நிறுவனத்துக்கும் பெரும் கௌரவம் சேர்த்தார்.

— கார்க்கி




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி.ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**செ. ஏக்நாத் ராஜ்**
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

ஸ்ரீ ஸ்ரீ ரவிசங்கர்

# பக்திக்கு அழைத்துச்செல்லும் ஆசை

இந்தியாவில் ஒரு விவசாயியின் மகன், இங்கிலாந்துக்குப் போக வேண்டுமென வெகு நாட்களாக ஆசைப்பட்டான். அதற்காக மிகவும் பிரார்த்தனை செய்து வந்தான். அது நிறைவேறும் கட்டத்தில், அவன் அளவற்ற நன்றியுணர்வு உடையவன் ஆனான். நன்றியுணர்வு ஆசையைக் காட்டிலும் உயர்ந்தெழுந்தது. பிறகு அவன் இங்கிலாந்து போவது, போகாதது பற்றிக் கவலைப்படவே இல்லை.

உங்கள் பிரார்த்தனை நிறைவேற வேண்டுமானால், உங்கள் ஆசை தீவிரமானதாக இருக்க வேண்டும். எவ்வளவுக்கு எவ்வளவு உங்கள் ஆசை தீவிரமாக இருந்து, பிறகு அது நிறைவேறுகிறதோ, அந்த அளவிற்கு உங்கள் நன்றியுணர்வு உயர்கிறது.

ஆசையின் தீவிரம் உங்களை பக்திப் பாதைக்கு அழைத்துச் செல்கிறது. ஆசை ஆழ்ந்து தீவிரமாவதற்குக் காலம் அவசியம். அதே போல, ஆசை உண்டாவதற்கான தேவையும் தீவிரமானதாய் இருக்க வேண்டும்.

ஆசை நிறைவேறியவுடன், நன்றிப் பெருக்குணர்வில் ஆசை தன் கவர்ச்சியையும், முக்கியத்துவத்தையும் இழந்து விடுகிறது.

தங்கள் ஆசைகள் உடனே நிறைவேறாத போது, மக்கள் தாங்கள் அதிர்ஷ்டமில்லாதவர்கள் என்று நினைப்பர். ஆசையின் தீவிரம், ஒன்று உங்களுக்கு ஏமாற்றத்தை அளிக்கக் கூடும். அல்லது பிரார்த்தனை என்னும் வழிபாடு செய்யத் தூண்டும்.

பக்தியும் நன்றியுணர்வும் நிரம்பியதே வழிபாடு ஆகும். எந்த ஆழ்ந்த அனுபவமும் மெய்யறிவு கூட்டுகிறது. உங்களை முழுமையானவர்களாக ஆக்குகிறது.

உங்களுடைய மெய்யறிவு கெட்டியான சோளம் போன்றது. வெப்பத்தில் சோளம் பொரிவதைப் போல, ஞானம் என்ற நெருப்பில் மெய்யறிவு தூய்மையாகி, மேலெழுந்து பூரிக்கிறது.

மேலட்டை, படங்கள்: சௌரா

அன்பின் ஊற்று–1



# குருஜி

ஆனந்தம், அன்பு, விளையாட்டு, கவிதை, ஆழ்ந்த ஞானம் இவை எல்லாவற்றுடனும் சேர்ந்து ஒரு குறும்புப் புன்னகையுடன் தம் ஆதரவாளர்களிடையே பேசி மகிழ்பவர் ஸ்ரீஸ்ரீ ரவிசங்கர். இன்று நியூயார்க், நாளை கனடா, மறுநாள் ஆஸ்திரேலியா என்று உலகம் முழுக்க பக்தர்களை ஈர்ப்பவர். இவருடைய கருத்துக்கள், செய்திகளாக, சொற்பொழிவுகளாக உலகெங்கும் தற்போது பரவி வருகின்றன. எளிமையாகவும், புதுமையாகவும், சிந்தனையைத் தூண்டுகிற ஆழ்ந்த கருத்துக்களாகவும் இவற்றை வெளிப்படுத்துவதுதான் இவரது சிறப்பு.

இவரது 'ஆர்ட் அஃப் லிவிங்' பயிற்சி, உலகில் 140 நாடுகளில் பின்பற்றப்படுகிறது.

தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்த பாபநாசத்தில் பிறந்தவர் ஸ்ரீஸ்ரீ ரவிசங்கர். இவருக்கு குரு என்று யாரும் கிடையாது. சிறந்த மனித நேயப் பண்புடையவர். அவருடைய ஞான மொழிகள், லட்சக் கணக்கான பக்தர்களுக்கு மன அமைதியையும், தன்னம்பிக்கையையும், மன உறுதியையும், தெளிவையும் கொடுத்திருக்கிறது. ஸ்ரீஸ்ரீ ரவிசங்கர் ஒவ்வொரு வாரமும் சிறிய மக்கள் கூட்டத்தோடு உட்கார்ந்து வழங்கும் சின்னஞ்சிறு சிந்தனைகள் அன்றைய தேவைக்கு ஏற்றதாக அமைந்து விடும். அந்த சிந்தனைகள் உலகம் முழுதும் உள்ள வாழும் கலை குடும்பத்தினரைச் சென்றடைந்துவிடும்.

சுப்பிரமணியர் கோயில்

# அசத்துகிறார் அடியார்க்கும் அடியவன்!

"உம்பர் தருத் தேனுமணிக் கசிவாகி..." என்று துவங்கும் அந்தத் திருப்புகழ்ப் பதிகத்தின் ஒரு பத்தி முடிந்தவுடன் கல்வெட்டின் கீழுள்ள செய்தி நம்மை ஆச்சர்யப்பட வைக்கிறது...

"உலக நலனுக்கு நம்மால் ஒரு மரம் வளர்க்க வசதியில்லாவிட்டால் என்ன? ஒரு சிறிய தொட்டியில் சிறிய செடியையாவது வளர்க்கலாமே" என்று சொல்கிறது அந்தச் செய்தி. அதற்கும் கீழே 'முருகன் அடியார்க்கும் அடியவன்' என்ற பெயர்.

இந்த ஒரு கல்வெட்டு மட்டுமல்ல, இருபது கிரானைட் கற்களில், திருப்புகழ், திருமுருகாற்றுப்படை, திருவருட்பா ஆகிய பக்தி இலக்கியங்களிலிருந்து, பதிகங்களை எடுத்துச் செதுக்கி, அதன் கீழேயே இயற்கையைப் போற்ற வேண்டியதன் அவசியம் குறித்தும், மரம் நட வேண்டிய தேவையைப் பற்றியும், மரங்களைப் பாதுகாக்க வேண்டிய அவசியங்களைக் குறித்தும் பளிச்சென செதுக்கப்பட்டிருக்கிறது.

இவை மட்டுமின்றி, பிளாஸ்டிக் மனித குலத்தைச் சீரழிக்கும் முறையைக் குறித்த விளக்கம், தொட்டிலிலிருந்து, சுடுகாடு வரை மரங்கள் எந்தவிதத்தில் மனிதனுக்குப் பயன்படுகின்றன என்பது குறித்த முழு விவரம் கொண்ட கல்வெட்டுகளும் உண்டு. கோயிலுக்கு வரும் அன்பர்கள் வள்ளி, தெய்வானை உடனுறை சுப்பிரமணியனை தரிசித்து விட்டு, பிரகாரத்தை வலம் வரும் போது இந்தக் கல்வெட்டுச் செய்திகளும் அவர்களை வரவேற்கின்றன.

வேலூர் கொசப்பேட்டை சுப்பிரமணியர் கோயில் ஆறாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்கிறார்கள். ஆனால் இதற்கான கல்வெட்டு ஆதாரம் எதுவுமில்லை. கோடிக்கணக்கான சொத்துக்கள் இருந்தும், கோயிலுக்கு எதுவும் பயனில்லையாம். திருப்பணிகள் செய்து, கும்பாபிஷேகம் செய்ய வேண்டும் என்று பத்தாண்டுகளுக்கு முன்னர் தீர்மானம் செய்யப்பட்டு கமிட்டி

வேலூர் ராமமூர்த்தியைப் போல உங்கள் ஊரிலும் வித்தியாசமானவர்கள் இருக்கலாம். சுய உதவிக் குழுவின் சாதனைகள், தனி நபர் ஆற்றல், வரலாற்றுப் பெருமிதம், புதுமையான விளையாட்டு, வினோதமான பழக்கம், தொன்மையான கலை, சிரிப்பூட்டும் நிகழ்ச்சி, விவகாரமான சங்கதி, அரசியல் அனுபவம்... இப்படி உங்கள் ஊரின் ஸ்பெஷாலிடி எதுவாக இருந்தாலும், இரண்டு முழு நீள தாள்களுக்கு மிகாமல் எழுதி அனுப்புங்கள்.

சுவாரசியமான கட்டுரைகளுக்குத் தகுந்த சன்மானம் காத்திருக்கிறது. உறையின் மீது 'எங்க ஊரு சங்கதி' என்று எழுதி, தகுந்த புகைப்படங்களுடன் அனுப்புங்கள். உங்க ஊர்ப் பெருமையை நாடே அறியட்டும்!

போடப்பட்டது. எட்டு வருடகாலம் திருப்பணிகள் நீண்டன. இதற்கு முக்கியக் காரணம் நிதி நிலைதான்.

வேலூரில் ஒரு தியேட்டரில் காசாளராக வேலை செய்த ராமமூர்த்தி, முருக பக்தர். திருப்பணி வேலைகள் நீண்டு கொண்டே போவதும், கும்பாபிஷேகம் தள்ளிக் கொண்டே போவதும், அந்த முருக பக்தரை ரொம்பவே பாதித்து விட்டது. முழு நேரப் பணியாக அவர் கோயில் வேலையில் இறங்க, கடந்த வருடம் கும்பாபிஷேகம் நடந்தது. அதற்கு முன்னதாக பிரகாரத்தை ஒட்டிய சுவரில் திருப்புகழ், திருமுருகாற்றுப்படை பதிகங்களைப் பதிக்கும் பேச்சு வந்தது. உடனே அந்தப் பொறுப்பை எடுத்துக் கொண்டார் ராமமூர்த்தி. தமக்கு கிடைத்த பிராவிடெண்ட் ஃபண்ட் பணத்தை முதலீடு செய்து கல்வெட்டுகளுக்கு ஆர்டர் கொடுத்தார்: அப்போதுதான் அந்த யோசனை அவருக்குப் பளிச்சிட்டது! இனி ஓவர் டு ர்ராமமூர்த்தி.



"சிறிய வயதிலிருந்தே எனக்கு இயற்கையைப் போற்றுவது பிடிக்கும். பள்ளிக்கூடங்க்ளுக்குச் சென்று குழந்தைகளிடம் 'மரம்' நமக்குத் தாய், தந்தையாக இருக்கிறது என்பதை எடுத்துச் சொல்வேன். கோயிலில் கல்வெட்டுகளைப் பதிக்க முடிவு செய்த போது, அந்தப் பொறுப்பை நான் எடுத்துக் கொண்டேன். பக்தியை மட்டும் போதித்தால் போதுமா! இன்றைய சூழலுக்கு ஏற்ப மக்களுக்கு மெஸேஜ் சொல்ல வேண்டாமா என்ற எண்ணம் தோன்றியது. திருப்பணி கமிட்டியிடமும், அறநிலையத் துறை அதிகாரிகளிடமும் என் யோசனையைச் சொன்னேன். அவர்கள் ஒப்புக் கொண்டார்கள்... இந்தக் கல்வெட்டுகளுக்கு ஐம்பதாயிரம் ரூபாய் செலவானது" என்றார் ராமமூர்த்தி.

ராமமூர்த்திக்குக் கல்யாணமாகவில்லை. 1993ல் மங்கையர் மலரில் 'உலக நன்மைக்காகவும், காடுகளின் வளர்ச்சிக்காகவும் பாடுபடும் ஓர் இளைஞருக்கு இயர்கையின் மீது ஈடுபாடு கொண்ட அன்பு ஒன்றையே மதமாக கொண்ட பெண் தேவை' என்ற விளம்பரம் கொடுத்தார். நிறையப் பெண்கள் முன் வந்தார்களாம். ஆனால் குடும்பத்தில் எழுந்த சிறு பிரச்னை காரணமாக, திருமணத் திட்டம் ஒத்திப் போடப்பட்டுவிட்டது.



மனிதவாழ்வில் மரங்கள்

கல்வெட்டு

"இனிமேல் திருமணம் செய்து கொள்வதாக யோசனையில்லை" என்கிறார் ராமமூர்த்தி. ராமமூர்த்தியிடம் பேசிக் கொண்டிருக்கும்போதே நமது புகைப்படக்காரர் வழக்கமாகச் செய்வது போல காமிராவால் அவரைக் குறி வைக்க, "ஐயையோ, படம் மட்டும் வேண்டாம் ஸார். எனக்கு எந்த விதமான விளம்பரமும் தேவையில்லை. என் மெசேஜ் பலருக்குச் சென்று அது செயல்படுமானால் அதுவே போதும்" என்றார்.

— **ஸ்ரீநிவாசன்**

படங்கள்: **ராஜன்**

தகவல் உதவி: **காமாட்சி கைலாசம், வேலூர்.**

ரே+கேசவன்... இதென்ன பெயரே வித்தியாசமாக இருக்கிறதே! சாஃப்ட்வேர் கம்பெனியா? மருந்து கம்பெனியா? இன்ஸ்டன்ட் உணவா? என்று டிஸைன் டிஸைனாக உங்கள் மனத்தில் எண்ண அலைகள்தானே! உங்கள் யூகம் கொஞ்சம் சரிதான்.

ஆசிய அளவில் நம்பர் ஒன் பிராண்ட் டிசைன் நிறுவனம்தான் இது. இதன் நிறுவனர் சுஜாதா இன்ஃபோசிஸ், விப்ரோ, டைட்டான், ஹிமாலயா ட்ரக் (ஆயுர்வேதிக் கன்ஸெப்ட்), ஹிந்துஸ்தான் லீவர், டி.வி.எஸ், ரிலையன்ஸ், எம்.டி.ஆர். என நாட்டின் முதன்மைக் கம்பெனிகள் சுஜாதாவின் வாடிக்கையாளர்கள்! மேற்கூறிய நிறுவனங்களின் பிராண்ட் டிசைனர் சுஜாதாதான்!

அது சரி பிராண்ட் டிசைனிங்னா என்ன?

யேல் பல்கலைக்கழகத்தில் கிராஃபிக் டிசைன் பயின்று முதுகலைப் பட்டம் பெற்ற முதல் இந்தியப் பெண்மணி என்ற












சிறப்பைப் பெற்றிருக்கும் சுஜாதாவையே கேட்போமே...

"சிம்பிளா சொல்றேனே... பல வருடங்களுக்கு முன்பு வரை அரிசி, உப்பு, ஆட்டா... என மளிகைச் சாமான்கள் மூட்டையில்தான் வரும். மக்களும் சந்தையில் அல்லது ஓப்பன் மார்க்கெட்டில் வாங்குவார்கள். ஆனால் மென்ன மென்ன நிலைமை மாறி கம்பெனி முத்திரையுடன் பாக்கெட்டில், ஜார்களில் வர ஆரம்பித்தது. ஒவ்வொரு

கம்பெனிக்கும் தனிக் கலர், தனிப்பட்ட பாக்கிங், தனி சின்னம்... என இருக்கும். இங்குதான் எங்கள் பணி. கண்கவர் பாக்கெட்டுகள், லோகோ ரெடி பண்ணுவோம். சில நசிந்து போன கம்பெனிகள் எங்களைத் தொடர்பு கொண்டு, "என்ன பண்ணினால் எழுந்து நிற்கலாம் என ஆலோசனை கேட்பார்கள். நாங்கள் பல்வேறு கோணங்களில் அலசி ஆராய்வோம். தரத்தைப் பரிசோதனை செய்வோம். எந்த ஒரு ப்ராடக்டுமே கண்கவர் பாக்கெட்டில் கிடைப்பது மட்டுமல்லாது தரத்திலும் உயர்வாக இருக்க வேண்டும். அதில் நாங்கள் மிகவும் கவனமாக இருப்போம். இதுவரை லுக் கொடுத்து, மக்கள் மத்தியில் பாப்புலராக்கியது சுஜாதாதான். கிரீம், லோஷன், மருந்துகள்... என ஹிமாலயா ட்ரக்கிற்கென கண்கவர் ஜார்கள் ரெடி பண்ணியிருக்கிறார்.

எம்.டி.ஆர். ரெடிமேட் உணவு பாக்கெட்டுகளையும் டிசைன் செய்து அசத்தியிருக்கிறார்.

"பிராண்ட் டிஸைன் என்பது ஒரு கம்பெனியின் அடையாளம். ஒரு ஆபீசுக்குள் நுழைந்தால்,

# புதுப் பொலிவு பிஸினஸ்!



• சுஜாதா

ரிஸப்ஷனில் வரவேற்றுப் பேசுபவரிலிருந்து ஆஷ்ட்ரே, சோபா செட், பெயிண்ட், விசிட்டிங் கார்டு... என சகலமும் ஈர்க்க வேண்டும். இது எல்லாமே ஒரு மொழியாக, முகவரியாகச் செயல்பட வேண்டும். உலகெங்கிலும் சிட்டி பாங்க் மற்றும் மெக்டோனால்ட் மையங்கள் ஒன்று போலிருக்கும். இப்போது நாங்கள் இந்தியக் கம்பெனிகளுக்குப் புது வர்ணம் பூசி உலகெங்கிலும் கொண்டு போகப் போகிறோம். உலகத் தரமுள்ள டிசைனிங் நம்மாலும் கொடுக்க முடியும்..." ஆணித்தரமாகச் சொல்லும் சுஜாதா டிசைனிங் கெற்கென வாங்கிய விருதுகள் ஏராளம்!

பிராண்ட் டிஸைனிங் பண்ணியிருக்கும் எந்தக் கம்பெனியுமே சோடை போகவில்லை" என்கிறார் கம்பீரமாக!

சுஜாதா சொல்வது உண்மைதான். சுமார் நூற்று முப்பது வருடங்களாகச் செயல்படும் ஹிமாலயா ட்ரக் கம்பெனிக்கு ஒரு புது

சர்வதேச அளவில் சிறந்த கிராஃபிக் டிசைனராக இருமுறை விருது பெற்றிருக்கும் ஒரே இந்தியர்,

## மனைவி அமைவதெல்லாம்...

கீழே உள்ள பிரபலங்களின் மனைவிகளின் பெயர்கள் கட்டங்களில் உள்ளன. (ஒவ்வொரு பெயரிலும் உள்ள எழுத்துக்களும் அடுத்தடுத்த கட்டத்தில் எந்த திசையிலும் இருக்கக் கூடும்). மீதமுள்ள எழுத்துக்களை ஒழுங்குபடுத்தினால் சமீபத்தில் செய்திகளில் அடிப்பட்ட ஒருவரின் பெயர் கிடைக்கும். அவர் யார் என்று கண்டுபிடியுங்கள்.



1. மகாத்மா காந்தி
2. ஜவஹர்லால் நேரு
3. பெரியார் ஈ.வெ.ரா.
4. ராஜீவ் காந்தி
5. லால்பகதூர் சாஸ்திரி
6. லாலு பிரசாத் யாதவ்
7. எம்.ஜி.ஆர்.

| க | யா | ரா | ப் | ரி | ல் |
|---|---|---|---|---|---|
| ஸ் | னி | ளி | லா | தே | மை |
| தூ | சோ | ட | கி | வி | ம் |
| ர் | ஹி | ன | ல | லி | ய |
| பா | ஜா | ன் | ரி | தா | ணி |
| ன் | க | ம | லா | கி | ம |

— ஜி.எஸ்.எஸ்.

செய்திப் பிரபலம் — ஹில்லாரி கிளின்டன்

விடைகள்: 1. கஸ்தூர்பா 2. கமலா 3. மணியம்மை 4. சோனியா 5. லலிதா 6. ராப்ரிதேவி 7. ஜானகி

ஈஸ்டர்ன் பிரஸ் அவார்ட் மற்றும் ஷிக்கில் கோலிங்வுட் போன்ற மிகவும் மரியாதைக் குரிய விருதுகளும் சுஜாதாவுக்குக் கிடைத் திருக்கின்றன. அகமதாபாத்தில் தேசிய டிசைன் இன்ஸ்டிட்டியூட்டில் படித்து விட்டு, வெளிநாட்டிலிருந்தும் மேற்படிப்புப் படித்து, தன்னை முழுமையாகத் தயார்ப் படுத்திக் கொண்ட பிறகே கோதாவில் இறங்கியிருக்கிறார். இன்று வரை அம்மணி தான் டாப்!

"இன்னமும் பிராண்ட் டிசைனிங் பற்றிய விழிப்புணர்ச்சி இங்கு இல்லை. ஆர்ட் எடுத்துப் படித்தால் சம்பாதிக்க முடியுமா என்றெல்லாம் பெற்றோர்களுக்குச் சந்தேகம். இது கஷ்டமான துறை. தினமும் சவால் தான். ஆனால் அந்தச் சவால்களை ஒரு கை பார்ப்பதில்தான் த்ரில்லே" என்கிறார் சுஜாதா.

தமிழ் ஐயங்கார் பெண்ணான சுஜாதா மணந்திருப்பது ராமசந்திர குஹாவை! நாம் அவரை பெங்காலி என்று நினைத்திருக்க, "ஹய்யோ, இல்லீங்க. பக்கா ஐயர். குகன் என்ற பெயரை குஹா என்று மாற்றி வைத்துக் கொண்டிருக்கிறார். டேராடூனி லேயே வளர்ந்ததினால் தமிழ் கொஞ்சம் கூட வராது அவருக்கு" எனச் சிரித்துக் கொண்டே சொல்கிறார்.

குஹா எழுத்தாளர். வரலாற்று ஆய்வாளர். பல புத்தகங்கள் எழுதியிருக் கிறார். (உங்களைத் தனியே சந்திக்கிறோம் சார்!)

கேசவன், ஐராவதி என இரு குழந்தை கள். பிரபல தமிழ் எழுத்தாளர் சூடாமணி சுஜாதாவுக்கு நெருங்கிய உறவினர்!

வாழ்க்கையில் எதுவுமே டூ லேட் இல்லை என்கிறார் இந்த நாற்பது ப்ளஸ் சுஜாதா. எதுவும் எப்போதும் எந்த வயதிலும் கற்றுக் கொள்ளலாம் என்பதைக் கொள்கையாக வைத்திருக்கிறார்.

யார் சொன்னது, அழகும் அறிவும் ஒரு சேர இருப்பது அபூர்வம் என்று? அவர் களது எண்ணங்களை மாற்றி, புது வடிவில் டிசைன் செய்ய பெங்களூரில் அழகும் அறிவும் நிறைந்த ஒரு பெண் காத்திருக் கிறார்!

பெங்களூரிலிருந்து :
**லதா சேகர்**

# சந்தாதாரர் காட்டிலே பரிசு மழை!



கல்கி பத்திரிகைக்கு
ஆறு மாதச் சந்தா ரூ.165
கட்டினால் போதும், ரூ.20 பெறு
மானமுள்ள 'வாழ்க நலமுடன்' கல்கி
சிறப்பு மலர் இலவசம்!

அல்லது

ஒன்றரை ஆண்டுச் சந்தா ரூ.495 கட்டினாலோ, ரூ.80 பெறுமானமுள்ள கல்கி தீபாவளி மலர், ரூ.20 மதிப்புள்ள 'வாழ்க நலமுடன்' சிறப்பு மலர் ஆகிய இரண்டுமே இலவசம்!!

'வாழ்க நலமுடன்' மருத்துவ மலரும் 2003- கல்கி தீபாவளி மலரும் விலை மதிக்க முடியாத அளவில் மகிழ்ச்சியும் பயனும் தரத் தக்கவை. இந்தப் பொக்கிஷங்கள் இரண்டும் குறைந்த எண்ணிக்கையிலேயே சந்தாதாரருக்காக ஒதுக்கப்படுகின்றன.

எனவே ஏமாற்றத்தைத் தவிர்க்க உடனடியாகச் செயல்படுங்கள்.

ஏற்கெனவே எமது நேரடி சந்தாதாரராக இருப்போரும் ஓராண்டு அல்லது ஒன்றரை ஆண்டுக்கு சந்தாத் தொகை அனுப்பி, தங்கள் சந்தாவை நீடிக்கச் செய்து பரிசுகளைப் பெறலாம். சந்தா எண்ணைத் தவறாமல் குறிப்பிடவும்.

முழு விலாசத்தைத் தெளிவாக எழுதவும்.

முடிவு தேதி ஜூலை 12, 2003.

*'வாழ்க நலமுடன்' சிறப்பு மலர், ஜூலை 20 கல்கி இதழுடன் சேர்த்து வெளியிடப் பெறுவதால், இத் திட்டத்தின் முடிவு தேதியை ஒத்திப் போடுவதற்கில்லை. 'கல்கி' என்ற பெயருக்கு சந்தாத் தொகையை* **D.D, M.O** *அல்லது* **Cheque** *மூலம் அனுப்பலாம். வெளியூர்* **Cheques** *ஏற்கப்பட மாட்டா.*

கல்கி சந்தாத் தொகை அனுப்ப வேண்டிய முகவரி:
சர்க்குலேஷன் மானேஜர், கல்கி காரியாலயம்,
47, N.P. ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை 600 097.

**அரிய வாய்ப்பு! தவற விடாதீர்கள்!!**

## - கொதிக்கிறார் கிருஷ்ணசாமி


* கிருஷ்ணசாமி

கமலின் 'சண்டியர்' படப்பிடிப்பு டாக்டர் கிருஷ்ணசாமியின் எதிர்ப்பால் தடைப்பட்டு நிற்கிறது. படப்பிடிப்புக்குப் பாதுகாப்புக் கொடுக்க இயலாது என்று முதல்வரும் கைவிரித்து விட்டார். இந்த நிலையில் டாக்டர் கிருஷ்ணசாமியுடன் பேசினோம்.

*''சண்டியரி'ல் என்ன பிரச்னை?''*

'வீச்சரிவா கலாசாரத்துக்கும் போக்கிரித்தனத்துக்கும் லாலி பாடும் விதமாக கமல், சண்டியரை எடுக்க நினைக்கிறார். அதனால்தான் எதிர்க்கிறோம்.'

*''இந்தச் சாயலில் பல படங்கள் வந்துள்ளனவே''*

தென் மாவட்டங்களைப் பொறுத்த மட்டில் 'சண்டியர்' ஒரு ஜாதியோடு தொடர்புபடுத்திச் சொல்லப்படுகிறது. அந்த ஜாதியைச் சேர்ந்தவர்கள் மட்டுமே வீரத்திற்குச் சொந்தக்காரர்கள் என்பது போல சித்திரிக்க முயல்கிறார் கமல். 'பெரிய சண்டியர், சின்ன சண்டியர்' என்றெல்லாம் பட்டப் பெயர் கொடுக்கும் வழக்கம் தென் மாவட்டங்களில் உண்டு. இந்தச் சண்டியர்கள் சில ஆண்டுகளுக்கு முன்புவரை கூட, தாழ்த்தப்பட்ட மக்களின் மீது வன்முறையை ஏவி அவர்களைத் துன்புறுத்தி வந்தார்கள். ஒழிக்கப்பட்ட அந்தக் கலாசாரத்துக்கு புதிய வர்ணமும், புதிய இரத்தமும் பாய்ச்ச கமல் முயல்வதால் இந்த எதிர்ப்பு.

*''படத்தின் கதை என்னவென்று தெரியாதபோதே, எதிர்ப்பது சரிதானா?*

பெயர் மட்டுமே போதும் எதிர்ப்பதற்கு. அதுவே சொல்லி விடுகிறதே! அடிப்படையே தவறு. இப்படியே போனால் தமிழகத்தில் உள்ள ஒவ்வொரு ஜாதிக்கும் ஓர் ஆயுதத்தைக் கொடுத்து அடையாளம் காட்டுவார் கமல். ஒரு வகுப்பாரின் வீரத்தை மட்டும் போற்றிப் பாட படம் எடுக்கிறார் கமல். இந்தப் படம் வந்தால் தென்மாவட்டங்களில் இரு பிரிவினரிடையே மோதல் ஏற்படும். சமூக அமைதிக்கு ஆபத்து உண்டாகும். படத் துவக்க விழாவின்போதே கமலின் நோக்கம் தெரிந்துவிட்டது.

*'சண்டியர்' பெயர் மாற்றப்பட்டால் எதிர்ப்பு விலகுமா?*

குறிப்பிட்ட ஜாதியைப் பெருமைப்படுத்துவது போல படங்களை எடுப்பதற்குப் பதில் ஒட்டுமொத்த தமிழ் இனத்தின் பெருமையை உயர்த்தும்படியாக படம் எடுக்கட்டும். வன்முறை, ஜாதிப் பிரிவுகள், ஆபாசம் ஆகியவற்றைத் தொடர்ந்து எதிர்ப்போம்.



# ''ஜாதிக்கு ஓர் ஆயுதம் கொடுப்பார் கமல்!''

— ப்ரியன்

அயோத்தி பிரச்னை குறித்த வழக்கு

அரசியல்வாதிகள்

மதத் தலைவர்கள்

# அரசியல்வாதிகள் பிடியில் அயோத்தி!

கடவுளே வந்தாலும் சீர்திருத்த முடியாத அளவுக்கு ராம ஜன்மபூமி பிரச்னையை வளர்த்து வைத்துள்ளனர் நம் அரசியல் வாதிகள். அவர்களுக்குத் தோள் கொடுத்து தாராளமாக உதவு கிறார்கள் மதத் தலைவர்கள்!

பாப்ரி மசூதி தகர்க்கப்பட்டதை எதிர்த்து வழக்கு தொடுக்கப் பட்டு விசாரணையில் இருக்கிறது. அகழ்வாராய்ச்சி நடத்தி அதன் கண்டுபிடிப்புகளைச் சமர்ப்பிக்கச் சொல்லி நீதிமன்றம் உத்தரவிட்டிருக்கிறது.

ஒரு வழக்கு நிலுவையில் இருந்தால், அது குறித்துப் பேசக் கூடாது, அபிப்பிராயங்களை வெளியிடக் கூடாது என்பது விதி முறை. ஆனபோதிலும், நம் அரசியல் தலைவர்களும் மதத் தலைவர்களும் ராம ஜன்மபூமி பிரச்னை குறித்து மௌனம் காப்பதில்லை.

'அரசியல் பிடியிலிருந்து அகற்றப்பட்டால்தான் அயோத்தி பிரச்னைக்குத் தீர்வு பிறக்கும்' என்கிறார் பிரதமர். ஆனால் பிரச்னையை அரசியலாக்கியிருக்கும் பிரதம குற்றவாளியே பி.ஜே.பிதான். 'அயோத்தியில் மீண்டும் ராமர் கோயில் கட்டு வோம்' என்று தேர்தல் வாக்குறுதி அளித்ததோடு, அரசின் செயல் திட்டத்திலும் அத் 'திருப்பணி'யைச் சேர்த்துள்ளது. பி.ஜே.பி. கூட்டணியில் இடம் பெற்றுள்ள பிற கட்சிகளின்



கல்கி



2003 ஜூன் 22
சுபானு ஆனி 8
மலர் : 61
இதழ் : 47




கொள்கைக்கு விரோத மென்பதால் அச்செயல்திட்டத்தை நடைமுறைப்படுத்த இயலாத நிலைமை. அதே சமயத்தில், பி.ஜே.பியை இயக்கும் மத அடிப்படைவாத அமைப்புகளின் தலைவர்கள் யாவரும் ராமர் கோயில் அமைப்பதற்காக மிக ஆக்ரோஷமாகக் குரல் கொடுக்கிறார்கள்; செயலிலும் இறங்கிவிட்டார்கள். சென்ற ஆண்டு, பிரச்னைக்குரிய நிலத்தில் 'சிலான்யாஸ்' என்ற துவக்கச் சடங்கு நடத்துவதற்குக் கூட அனுமதி அளித்து, பாதுகாப்பும் அளித்தது மத்திய அரசு. அந்த நிகழ்வைத் தொடர்ந்துதான் குஜராத்தில் மதக் கலவரங்கள் மிகக் கோரமாக வெடித்தன.

இத்தனை நடந்த பிறகும் பிரதமரோ, துணைப் பிரதமரோ, 'ராம ஜன்ம பூமி பற்றி இனி யாரும் மூச்சு விடக் கூடாது. நீதிமன்றத் தீர்ப்பு வெளிவரக் காத்திருங்கள்' என்று அடித்துப் பேசவில்லை.

ஒரு புறம் விச்வ ஹிந்து பரிஷத் யாகம் செய்து, அயோத்தியில் ராமர் கோயில் கட்டும் வரை கையில் அணிய 'சங்கல்ப சூத்ர'க் கயிறுகளை வினியோகிக்கிறது! இதை யாரும் தட்டிக் கேட்பாரில்லை; கண்டிப்பாரில்லை.

மற்றொருபுறம் காஞ்சி மடாதிபதி, தாம் முஸ்லிம் மதத் தலைவர்களிடம் பேசி பிரச்னைக்குத் தீர்வு கண்டுவிட்டதாகப் பிரதமரைச் சந்தித்துச் சொல்கிறார்! வக்ஃப் வாரியத் தலைவர்களோ, காஞ்சி சங்கராச்சார்யாரின் கூற்றை அப்பட்டமாக மறுக்கிறார்கள். 'யாரிடம் அவர் பேசினார்? யாரைக் கேட்டுப் பேசினார்? இப் பிரச்னை குறித்துப் பேச சங்கராச்சார்யார் எந்தத் தகுதியில் முன் வந்தார்...? யாரோ இருவர் பேசிக் கொண்டதால் நாங்கள் சமரசம் செய்து கொள்ள எப்படிச் சம்மதிக்க முடியும்?' என்று மிக முரட்டுத்தனமாக மொத்த முயற்சியையும் நிராகரித்துள்ளனர்.

விரிந்து பரந்த இந்தியாவில், மதத் தலைவர்களுக்குக் குறைவில்லை. அவர்களுள் யாரை அனைத்து ஹிந்துக்களின் பிரதிநிதி என்று குறிப்பிடுவது? யாரை அனைத்து




முஸ்லிம்களின் தலைவர் என்று ஏற்பது? சர்ச்சையின்றி ஒரு தலைவர் தேர்வு செய்யப் படுவதற்கான வாய்ப்பே இல்லை.

ஆகவே, நீதிமன்றத் தீர்வுக்காக காத்திருந்து செயல்படுவதுதான் நியாயம்; நாட்டுக்கும் நல்லது.

ஆனால், நீதிமன்ற நடவடிக்கையாக நடைபெறுகின்ற அகழ்வாராய்ச்சி கூட, நியாய மாக நடைபெறவில்லை என்கிற சந்தேகம் தற்போது எழுந்திருக்கிறது. தொல்பொருள் ஆய்வுத் துறையினர் ஆதாரங்கள் சேகரிப்பதில் ஒருதலைபட்சமாகச் செயல்படுவதாக மத்திய சுன்னி வக்ஃப் வாரியம் குறை கூறியிருப்பதுடன் நீதிமன்றத்தில் புகாரும் தொடுத்துள்ளது.

தற்போது ஆளும் மத்திய அரசின் பிற செயல்பாடுகளையும் ஹிந்து சார்பு நிலை யையும் பார்க்கையில், வக்ஃப் வாரியத்தின் புகாரை அடியோடு ஒதுக்கிவிடுவதற் கில்லை.

ராமஜன்ம பூமி பிரச்னையில் நீதி மன்றம் மூலம் மட்டுமே நியாயம் கிடைக்கும் என்ற நம்பிக்கைக்குக் கூட அபாயம் ஏற்பட்டிருப்பது மிகக் கேவலம்.

இந்திய அரசியல் சாசனம், அரசு மதச்சார்பற்றதாக இருக்க வேண்டும் என்பதை மிகத் தெளிவாகக் கூறியிருக்கிறது. இன்னும் ஒரு படி மேலே போய், நாடே மதச்சார் பற்ற நாடு என்று உறுதி செய்திருக்கிறது. அனைத்து மதங்களுக்கும் சம அந்தஸ்தும் உரிமையும் உண்டு என்பதே இதன் பொருள்.

அரசியல் சாசனத்தை மதியாமல், ஹிந்து ராஜ்யம் அமைப்போம் என்று உணர்ச்சி களைத் தூண்டி குறுக்கு வழியில் வோட்டுப் பெறப் போய், இப்போது அதன் விளைவாக நாடெங்கும் கோயில் – மசூதி பிரச்னைகள் முளைத்துக் கொண்டிருக்கின்றன. அமைதியாக வாழ விரும்பும் ஹிந்து – முஸ்லிம் சகோதரர்கள் அரசியல் பேராசை களுக்குப் பலியிடப்பட்டிருக்கிறார்கள். ○

# நளதமயந்தி

நகைச்சுவை உணர்வைப் பின்னணியாகக் கொண்ட படங்களில், சோக உணர்ச்சியை அடைத்துத் தருவது அத்தனை சுலபமல்ல. வரைபட எல்லைகளைக் கடந்த, நகைச்சுவை மேதை சார்லி சாப்ளின் போன்ற ஒரு சில கலைஞர்களுக்கே, இந்த ரசவாதம் வசப்பட்டது. நமது தமிழ்நாட்டில் பிறந்த மௌலிக்கும் கூட என்று சொன்னால் மிகைப்படுத்தல் அல்ல.

மொழி தெரியாத ஓர் அந்நிய தேசத்தில், தனது சுய முகவரியைத் தொலைத்துவிட்டு நிற்கிற, ஒரு அப்பாவிக் கேரள இளைஞனின் வலி மிகுந்த வாழ்க்கைப் போராட்டத்தை ஜன்னல் வழியே எட்டிப் பார்த்துவிட்டு வந்த உணர்வு.

கதைக்களம் ஆஸ்திரேலியா என்பதாலோ என்னவோ, கங்காரு பாய்ச்சலில் விரைந்து, எங்கும் நிற்காமல் பட்டென்று முடிந்து விடுகிற படத்திற்கு கமலின் அபார திரைக்கதை அறிவு வலிமை சேர்ந்திருக்கிறது.

''நல்லாயிருந்தா பேனாவில் எழுது. இல்லேன்னா பென்சில்லே எழுது. புரிஞ்சுகிறேன்'' என்று வரதட்சிணை அரியர்ஸ்சில் வாடும் தங்கையிடம் டெலிபோனில் உருகுகிற பாச அண்ணன் என்றாலும், ஆஸ்திரேலியா போலிசிடமிருந்து தப்பிக்க கீது மோகன்தாஸை சும்மானாச்சுக்கும் (மேரேஜ் ஆஃப் கன்வீனியன்ஸ்) கல்யாணம் செய்து கொண்டு, அப்புறம் நிஜமாகவே நேசிக்கும் காதலன் என்றாலும், மாதவன் ஓரிடத்திலும் நடிக்கவில்லை, பாத்திரமாகவே கரைந்து போய்விடுகிறார்.

யாழ்ப்பாணத்திலிருந்து நிஜமாகவே ஆஸ்திரேலியாவிற்கு புலம் பெயர்ந்த தமிழ்ப் பெண் போல, கொடுத்த பாத்திரத்திலிருந்து இம்மிகூட விலகி விடாத கீது மோகன்தாஸ், தரமான புதுவரவு.

ஆஸ்திரேலியா மண்ணில் மாதவனுக்கு அடைக்கலம் தரும் ஸ்ரீமன், அனுஹாசன் தம்பதியின் மனவளம் குன்றிய மகனுக்கும், மாதவனுக்கும் இடையிலான ரிலேஷன்ஷிப், நல்லதொரு நவீனக்கவிதை.

மாதவனை அவரது முதல் விமானப் பயணத்தில் சித்திரித்திருக்கும் விதம் வயிறு குலுங்கச் சிரிக்க வைக்கிறது. ஆனால் அரைகுறையாக ஆங்கிலம் பேசும் சமகால இளைஞர் என்று பார்த்தால், லாஜிக் இடிக்கிறது. ரமேஷ் விநாயகம் இசையில் கமல் பாடிக் கலக்கியிருக்கும் "ஸ்ட்ராண்டெட் ஆன் தி ஸ்ட்ரீட்", "சூடு பட்டதோ" பாடல்கள் புதிய வண்ணங்களோடு ஒலிக்கின்றன. துருவித் துருவித் தேடியதில் துளி நாடகத் தன்மை கூட இல்லாமல், உளி கொண்டு செதுக்கியது போல் மௌலி இயக்கியிருக்கும் நளதமயந்தி, எல்லாத் தரப்புக்கும் பிடித்த ஹோம்லி பால் பாயசம்.

• அபவ் ஆவரெஜ் — விஷுவல்தாசன்

# திசை

என் பெயர் எனக்கு அனாவசியம்
அதைக் கழுதைபோல
தூக்கிச் சுமந்தபடி திரிவது சிரமம்.

என் பெயரின் எழுத்துக்களை
என் பாட்டன் அப்பன் குழந்தை என்று
எல்லோரும் பங்கு போட்டுப் போக
மிச்சமான கொஞ்சூண்டு
ஒரு புள்ளியில்
தொங்கியபடி கிடக்க வேண்டும்
அதில் எனக்கு வசதிக் குறைவே
கூடுதல்.

நேஷனல் ஹைவேஸ்
ரோட்டங்கரை மரங்களுக்கு
அதன் இறுகிய தசைகளைக் குத்தி
நம்பர் போட்டு வைப்பது போல
எனக்கும் ஒரு நம்பர் தாருங்கள்
தசைகளில் குத்திக் கொண்டு
திரிகிறேன்.

மொழியின் வார்த்தைகள்
எழுத்துக்கள் ரகசிய அடுக்கு
நிறைந்துள்ளது.
எனக்கு
எண்கள் போதும்.



**லக்ஷ்மி மணிவண்ணன்**

# புக் பேங்க்

**நா.ம.எனும் சான்றோர் - எம். இப்ராஹிம் அலாதின். தமிழில்: ராணி மைந்தன்**

'ஆத்மா பிரும்மஸ்வரூபம், பிரும்மம் வாத்ஸல்யஸ்வரூபம்' என்கிறது வேதம். அன்பை விட ஆழமான பொருளை உடையது வாத்ஸல்யம். அன்பும், அறிவும், அருளும் சேர்ந்த கலவை அது. அந்தக் கலவையை ஆத்மாவில் கொண்ட மனிதரென்பதால்தான், நா.ம. அவர்களை 'நன்று நினைத்து, நன்றுரைத்து, நன்று புரியும் - அருட் செல்வர்' என்றார் திருமுருக கிருபானந்த வாரியார். பண்பு மிக்க அரசியல்வாதி, உயிர்நாடியாக விவசாயம், தொழில் துறை விற்பன்னர், அறிவார்ந்த நிர்வாகி, கல்வித் துறையில் தொலை நோக்காளர் - என அவரது பல முகங்களை நூல் விளக்கினாலும், எல்லாவற்றுக்கும் அடிநாதமாக இருக்கும் மனிதநேயம், ஆன்மிக பலம், எளிமையான வாழ்க்கை- இவைதான் அருட்செல்வராக்குகிறது. முயற்சியும், நேர்மையும் கொண்டோருக்கு இந்நூல் ஒரு வழிகாட்டும் அகராதி.

'இந்தியாவை மாற்றிச் சீரமைக்க அறிவும், திறனும் கொண்ட நூறு இளைஞர்களைத் தாருங்கள்' - என்றார் விவேகானந்தர். இந் நூலைப் படித்திருந்தால், 'முதியவரானாலும் சரி, இப்படிப் பத்துப் பேரைத் தாருங்கள், போதும்' - என்றிருப்பார்.

*டாக்டர் மகாலிங்கம் பொறியியல் & தொழில் நுட்பக் கல்லூரி, பொள்ளாச்சி, விலை. ரூ.150/-*

**வாழப் பழகுவோம் வாருங்கள் - சுகி. சிவம்.**

ஆன்மிகமும் அன்றாட வாழ்வும் எங்கே ஒன்றிப் போகிறது? ஆன்மிகம் யதார்த்த வாழ்வுக்கு உதவக் கூடுமா? - என்ற கேள்விகளுக்குப் பதில் இந்நூல்.

புராண, இலக்கியங்களிலிருந்து செதுக்கியெடுத்து, பதமாக, இதமாக, சுவையாக வார்த்தது.

*வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17, விலை: ரூ.50/-*

**கலர் டெலிவிஷன் அசெம்பிளிங் & ரிப்பேரிங் - அ.ச. காசிநாதன்.**

எல்லாத் தரத்து மக்களும் உபயோகப்படுத்தும், டீ.வி.யின் இயக்கம், பழுது பார்த்தல், புதிதாக வடிவமைத்தல் - அனைத்தையும் எளிதாகப் புரியும்படி தமிழில் விளக்கி, பிழைப்புக்கு வழிகூறும் நூல்.

*மணிமேகலைப் பிரசுரம், 7, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 17, விலை ரூ. 80/-*

**அடுத்த வினாடி டாக்டர் ரூமி.**

வாழ்வில் வெற்றியின் வெளிச்சமும் காற்றும் நம் மீது பட, படர, நம்மில் எந்தெந்த ஜன்னல்களை, கதவுகளைத் திறக்க வேண்டும், என்ன மனோ நிலையில் வாழ்வை எதிர்கொள்ள வேண்டும் என்று யதார்த்த உண்மைகளோடு விவரிக்கும் வழிகாட்டி நூல்.

*சபரி பப்ளிகேஷன்ஸ், 28, டேங்க் பண்ட் ரோடு, நுங்கம்பாக்கம், சென்னை - 34, விலை. ரூ.60/-*

**Human Energy & Homeo Energy - வி.கே. ஆறுமுகம்.**

உடலின் ஆதார இயக்கத்திற்கு நம்முன்னே இருக்கும் மின்காந்த சக்தி எத்தனை அவசியமென்பதையும், அதை ஹோமியோபதி மருந்துகளினால் எவ்வளவு சீர் படுத்த முடியுமென்பதையும், நோய்களைத் தீர்க்க அவை எப்படி உதவுமென் பதையும் ஆங்கிலத்தில் விளக்கும் நூல்.

*ஹானேமன் பப்ளிகேஷன்ஸ், 50, முதல் அவென்யூ, அசோக்நகர், சென்னை 83, விலை. ரூ. 40/-*

— விஷ்வக்

## சோ எழுதிய வால்மீகி ராமாயணம்

## மஹாபாரதம் பேசுகிறது

அல்லயன்ஸ் நூற்றாண்டு சிறப்பு வெளியீடுகள் **100** தலைப்புகளில் **100** புத்தகங்கள்!

என். ஸ்ரீநிவாஸன் எழுதியது

முதன்முறையாகத் தமிழில் வெளிவரும்

### என்சைக்ளோபீடியா

| | | |
|---|---|---|
| 1. | நம்மவர் செய்த விந்தைகள் | 100 |
| 2. | அவர்கள் செய்த விந்தைகள் | 100 |
| 3. | உலக மகா கொடுங்கோலர்கள் | 100 |
| 4. | உலகப் புகழ் பெற்ற சொற்பொழிவுகள் | 100 |
| 5. | விந்தை உயிரினங்கள் | 100 |
| 6. | அரண்மனை ரகசியங்கள் | 100 |
| 7. | உலகப் புகழ் பெற்ற கட்டடங்கள் | 100 |
| 8. | நம்ப முடியாத உண்மைகள் | 100 |
| 9. | வியப்பூட்டும் உண்மைகள் | 100 |
| 10. | தாவர உலகிலே! | 100 |
| 11. | விந்தைத் தாவரங்களும் மூலிகைத் தாவரங்களும் | 100 |
| 12. | யார் என்ன சொன்னார்கள்? | 100 |
| 13. | நீருலகிலே! | 100 |
| 14. | பாலூட்டிகள் வரிசையிலே! | 100 |
| 15. | தமிழ் வளர்த்த பெருமக்கள் | 100 |

தனிப்பிரதி ஒன்றின் விலை ரூ.100/-

### Dr. சுப்ரமண்ய ஸ்வாமி

எழுதிய

## ராஜீவ் காந்தி கொலை

விடை கிடைக்காத
வினாக்களும் கேட்கப்படாத
கேள்விகளும்
(தமிழாக்கம் - சுதாங்கன்)

பரபரப்பான அரசியல்வாதியின்
பரபரப்பான புத்தகம்

**விலை ரூ. 125/-**

25000க்கும் மேற்பட்ட பழமொழிகளைக் கொண்டது 'வாகீச கலாநிதி' கி.வா. ஜகந்நாதன் தொகுத்த

## தமிழ்ப் பழமொழிகள் (4 தொகுதிகள்) ரூ. 300/-

காஞ்சீ மஹா ஸ்வாமிகள் ஸ்ரீ சந்திர சேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் திரு அவதாரத்தில் தொடங்கி - திரு அவதாரம் நிறைவு வரை - ஓவியர் சில்பியின் ஏராளமான படங்கள் - புகைப்படங்களுடன் - இரண்டு தொகுதிகள் - (ஸ்ரீ சாம்பமூர்த்தி ஸாஸ்த்ரிகள், குப்புஸ்வாமி ஐயர், பி.என். பரசுராமன் எழுதியது)

### பூஜ்யஸ்ரீ மஹா ஸ்வாமிகள் வரலாறு (ரூ.500/-)

### 'சொல்லின் செல்வன்' பி.என். பரசுராமன் எழுதிய நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| விதுர நீதி | ரூ. 30/- | சனத்குமாரரின் உபதேசங்கள் | ரூ. 25/- |
| நீதி சதகம் | ரூ. 21/ | பீஷ்மர் சொன்ன தத்துவக் கதைகள் | ரூ. 60/- |
| விபூதி ருத்ராட்சம் மகிமை | ரூ. 37/- | வைராக்கிய சதகம் | ரூ. 16/- |
| சித்தர்கள் சரித்திரம் | ரூ. 35/- | யட்சப் பிரச்னம் ப்ரச்னோத்ர ரத்னமாலிகா | ரூ. 25/- |
| துணுக் துணுக் | ரூ. 21/- | சித்ரகுப்தன் கதைகள் | ரூ. 18/- |
| அஷ்டாவக்ரர் உபதேசங்கள் | ரூ. 33/- | வாரியார் சொற்பொழிவில் கேட்டவை | ரூ. 60/- |
| மஹரிஷிகள் வரலாறு A.V. சகவனேஸ்வரன் | ரூ. 65/- | An Introduction to the Vedas (Ka.Sri.Sri) | ரூ. 60/- |



**அல்லயன்ஸ் கம்பெனி**

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மயிலாப்பூர்
சென்னை - 6000 004. ✆ 24941314

தமது முத்து விழாவைச் சமீபத்தில் கொண்டாடியிருக்கிறார் தமிழிசைக் கலைஞர் தருமபுரம் சுவாமிநாதன். சென்னைப் புறநகர் பகுதியான குன்றத்தூரில், தொலைபேசி இணைப்புக் கூட இல்லாத, எளிமையான வீட்டில் வாழ்ந்து வரும் அவரைச் சந்தித்தோம்.

இசைப் பின்புலத்துடன் கூடிய குடும்பப் பின்னணி இல்லாத போதும், தமிழ் இசையில் ஆர்வம் உண்டானது எப்படி?

ஊர் ஊராக இன்று, தேவாரம், திருவாசகம் பாடினாலும், நாங்கள் ஓதுவார் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல. சாதாரண விவசாயிதான் எனது தந்தை. எனக்கு பன்னிரண்டு வயதாகும் போது குடும்பத்தில் வறுமை. அந்தக் காலத்தில் எல்லாம், ஏழைக் குடும்பங்களுக்குத் தருமபுரம் ஆதினம்தான் அடைக்கலம். குடும்ப நிலை காரணமாக என்னை தருமபுரம் ஆதீன மடத்தில் சேர்த்து விட்டார்கள். அப்போது, திருவார் திரு சண்முகதேசிகர் மடாதிபதியாக இருந்தார். இவரிடம் அணுக்கத் தொண்டனாக அச் சிறு வயதில் வேலை பார்த்தேன். எனது சுறுசுறுப்பு மடாதிபதியைக் கவர்ந்தது. அப்போது தியாகராஜ பாகவதர் பாடல்களை வாய் விட்டுப் பாடுவேன். இயல்பாகவே நல்ல சாரீரம் இருந்ததால் மடாதிபதி ரசித்துக் கேட்பார். 'இவனை இப்படியே சும்மா விட்டு விடக் கூடாது' என்று நினைத்தாரோ என்னவோ, என்னைப் பாடச் சொல்லித் தூண்டிக் கொண்டே இருப்பார்.

ஏழு வருடங்கள் மடத்தில் வேலை செய்த பின்பு, என்னைத் தேவாரப் பாடசாலையில் சேர்த்து விட முடிவு செய்தார். ஆனால், எனக்கு விருப்பமில்லை. சினிமாப் பாட்டுக்களைச் சும்மா பாடத்தான் விருப்பமே தவிர, தமிழ் இசையைப் படிக்க வேண்டும் என்று நினைக்கவில்லை. தேவாரப் பாடசாலையில் சேர்ந்த கொஞ்ச நாளிலேயே ஓடி வந்து விட்டேன்.

இக்காலகட்டத்தில் என்னைக் கவனித்து வந்த அன்றைய கட்டளைத் தம்பிரான் அருள்நந்தித் தம்பிரான் (இவர் பின்னாளில் மடாதிபதியாக உயர்ந்தவர்) ஒரு முடிவுக்கு வந்தார். ஒருநாள் முழுவதும் என்னை மீண்டும் மீண்டும் பாடச் சொல்லியே என் மனசைக் கரைத்து விட்டார். தேவாரம் படிக்க மாட்டேன் என்று உறுதியாகச் சொன்ன என்னை எப்படித்தான் கரைத்தாரோ தெரியவில்லை. என்னை அறியாமலேயே அது நடந்தது.

# தேவாரம் பாடினால் மழை வரும்!



• மனைவி சுலோச்சனாவுடன் சுவாமிநாதன்

தருமபுரம் தேவாரப் பாடசாலையிலே ஐந்து ஆண்டுகள் படித்தேன். அன்று பிரபலமாக இருந்த மதுரை எஸ். சுப்பிரமணிய முதலியார்தான் தேவார இசை ஆசிரியராக இருந்தார். 'இது மட்டும்

# தருமபுரம் சுவாமிநாதன் பேட்டி

போதாது, இசை இலக்கணம் முழுமையாக நீ அறிந்து கொள்ள வேண்டும்' என்று கூறிய மடாதிபதி, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இசை பயிலச் சேர்த்து விட்டார். அங்கு சித்தூர் சுப்பிர மணியப் பிள்ளை ஆசிரியராக இருந்தார். நான்கு ஆண்டுகள் இசைக் கல்லூரியில் படித்த பின்பு தான் என்னையே நான் முழுமையாக உணர்ந்தேன்.

*இசை ஞானம் உள்ளவர்கள் எல்லாம் சினிமாவில் கொடிகட்டிப் பறந்த அக்காலத்தில், நீங்கள் சினிமா முயற்சிகளில் இறங்கவில் லையா?*

அண்ணாமலைப் பல்கலைக் கழக இசைக் கல்லூரியில் இருந்து வெளியே வந்ததும் 'இனி தமிழ் இசைதான் எனது மூச்சு' என்பதை முடிவு செய்து கொண்டேன். 1953 முதல் 68 வரை தருமபுரம் மடத்திலேயே தேவார இசை ஆசிரிய ராகப் பணியாற்றினேன். இந்தப் பதினைந்து ஆண்டுகளில் கோயில்களில் திருமுறை ஓதுவதை ஒரு நாள் கூட மறந்ததில்லை.



1968-ல் தருமபுரம் ஆதீனத்தை விட்டு வெளியேற நேர்ந்த போதும், இனி தேவாரம், திருவாசகம் இசைத்தேதான் வாழ்க்கையை நடத்துவது என்று முடிவு செய்தேன். வெளி நிகழ்ச்சிகள் நிறையக் கிடைத்தன. இதனால் புகழ் பெருகியது. இதைப் பார்த்து சினிமாக் காரர்கள் தேடி வந்தார்கள். நிராகரித்து விட்டேன்.

*சினிமா வாய்ப்புகளை நிரா கரித்ததற்கு என்ன காரணம்?*

அதற்குத் தேவை எனக் கூறப்படும் தகுதிகள் எனக்கு இல்லை என்று நினைக்கிறேன். தமிழி சையை விட்டு விட்டு வேறு பாடல்கள் பாடும் படி கூறினார்கள். சமரசம் செய்து கொள்ள விருப்பம் இல்லை.

*தமிழிசையின் அடிப்படை என்ன?*

தேவாரப் பண்கள்தான் தமிழிசையின் அடிப்படையாகத் தொன்றுதொட்டு இருந்து வந்திருக்கின்றன. இருபத்து நான்கு வகை யான பண்கள் உள்ளன. ஒவ்வொரு பண் இசைக்கவும் தனி வகை யான யாழ் இருந்தது. நமது கலாசாரம் பற்றிப் பெருமைப்படுவதில் நமது யாழ்களுக்கும் பங்கு உண்டு. இருபத்து நான்கு வகையான யாழ்கள் நம்மிடம் இருந்தன. இவற்றை இசைக்கும் முறைகள் கடின மாக இருந்ததாலோ என்னவோ, இவை இல்லாமல் போய் விட்டன.

*யாழ்கள் அழிந்தது போல் பண்களும் அழிந்தனவா?*

இன்றைய கர்நாடக இசையைச் சும்பபவை 'பண்' ராகங்கள்தான். இவற்றின் இலக்கணமாக யாழ் நூல், கூத்த நூல் போன்றவை இருந் தன. தமிழ் இசை குறித்து ஆபிரகாம் பண்டிதர் 'கருணானந்த சாகரம்' என்ற அற்புதமான நூலை அக்காலத்திலேயே எழுதினார். இருந்த போதும், வேற்று மொழிகள் வளர்ந்த அளவுக்கு இது வளரவில்லை. பின்னர், 'வேங்கடமகி' என்பவர், தமிழ்ப் பண்களை ஒழுங்கமைத்துத் தந்தார். இதன் அடிப்படையில் கர்நாடக இசை அமைந்தது. தமிழ் இசைதான் கர்நாடக இசையாக மாறி வளர்ந்துள்ளது.

*தமிழ் இசையில் நீங்கள் செய்த புதுமை எது?*

'பண்' இலக்கணத்தில் 'கொண்டு கூட்டுதல்' என்று ஒருமுறை உள்ளது. அதாவது, செய்யுள் இலக்கணப்படி சொற்கள் இணைந்து, இணைந்து இருக்கும். அதை அப்படியே பாடினால் அர்த்தம் புரியாது. இசையை வேண்டுமானால் ரசிக்கலாம். ஆனால், 'கொண்டு கூட்டுதல் முறைப்படி பதம் பிரித்து, பதம் பிரித்து பொருள் விளங்கும்படி பாடினேன். இதனால் அர்த்தம் புரிந்து ரசித்தார்கள். இது புதுமையாகவும் இருந்ததால் வரவேற்பு அதிகரித்தது. இந்தப் புதுமைக்கு ஆரம்பத்தில் கடும் எதிர்ப்பு இருந்தது. ஆனால், இன்று அனைவருமே இம்முறையைத்தான் பின்பற்றுகிறார்கள்.

*என்ன இருந்தாலும், இந்த சினிமா இசை உலகத்தில், தமிழ் இசை அழிந்துதானே வருகிறது?*



"யோவ் ராமசாமி! எங்கிட்ட நீ குடை இரவல் வாங்கிட்டுப் போய் ஒரு வார மாச்சு.. திருப்பிக் குடுக்கணுமேங்கற 'அறிவு' வேணாம்?"

"அடப்போய்யா! அதன் சொந்தக்காரன், மறுநாளே அதைத் திருப்பி வாங்கிட்டுப்போயிட்டான்!"

— கிரிஜா மணாளன்

தமிழ் இசை அழியவும் இல்லை. அழியவும் அழியாது.

அகாதமிகள் ஓரம் கட்டுவதாலேயே தமிழ் இசை இல்லை என்றாகி விடாது. நான் மட்டும் இதுவரை எண்ணூறுக்கும் அதிகமான கேசட்கள் தமிழிசையில் வெளியிட்டுள்ளேன். தமிழின் பன்னிரு திருமுறைகளில் உள்ள பத்தாயிரத்துக்கும் அதிகமான பாடல்கள் இவற்றில் இருக்கின்றன. இக்கேசட்டுகள் அனைத்தும் வெளியானவுடன் விற்றுத் தீர்ந்துதான் போகின்றன. வெளிநாடுகளில் வாழும் தமிழர்கள் தமிழிசை கேசட்டுகளைத் தேடித் தேடி வாங்குகிறார்கள். தமிழிசைச் சங்கம் தொடர்ந்து ஆதரவளித்து வருகிறது. ராஜா சர் அண்ணாமலை செட்டியார் குடும்பத்தினர் போன்றவர்கள் பண் ஆராய்ச்சிக்கு ஆதரவளிக்கிறார்கள்.

*ஆனால், இவ்வளவு இருந்தும் புறநகர் பகுதியில், தொலைபேசி கூட இல்லாத எளிமையான வீட்டில்தானே இருக்கிறீர்கள்?*

மனநிறைவு இருக்கிறது. மக்கள் ஆதரவும், இறைத் தொண்டில் திருப்தியும் இருக்கிறது. சினிமா இசையில், வேற்றுமொழி இசையில் பணமும் ஆடம்பரமும் இருக்கலாம். இன்றும் நான் தவறாமல் சைவக் கோயிலுக்குச் சென்று திருமுறை ஓதுகிறேன். ஆதலால் இறைவன் கைவிட மாட்டான். அனைத்து நோய்களுக்கும், அனைத்து பிரச்னைகளுக்கும் தேவாரத்திலேயே தீர்வு உள்ளது. குறிப்பிட்ட பாடல்களைப் பாடினால் குறிப்பிட்ட நோய்கள் குணமாகும். ஏன், மழை கூட வரும்.

*மழை வருமா?*

ஆம். மேக ராகக் குறிஞ்சிப் பண்ணில் எழுபது பாடல்கள் (ஏழு பதிகங்கள்) உள்ளன. இவற்றைப் பாடினால் நிச்சயம் மழை வரும். ஆனால், யாரும் இதைக் கூட்டாகச் செய்ய முன்வருவதில்லை.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு எட்டு கிரகங்கள் சேருவதாகவும், இதனால் பெரும் ஆபத்து என்றும் பீதி கிளம்பியது. அப்போது, எல்லாரும் சம்பந்தரின் தேவாரத்தில் உள்ள 'கோளறு' பதிகத்தைப் பாடும்படிதான் பெரிய சங்கராச்சாரியார் கூறினாராம்.

*தங்கள் குடும்பம் பற்றி?*

தமிழிசையே வாழ்க்கையாகக் கொண்டதால் திருமண வாழ்வில் நாட்டமில்லாமல்தான் இருந்தது. ஐம்பத்தியெட்டாவது வயதில்தான் சுற்றத்தார் வற்புறுத்தலின் பேரில் திருமணம் செய்து கொண்டேன். அதுவும், முதுமையில் ஒரு துணை வேண்டுமே என்பதற்காக. எனது உறவினர் குடும்பத்தைச் சேர்ந்த சுலோச்சனாவும் சைவத் திருமுறைகளில் உள்ள ஈடுபாட்டால் அதுவரை திருமணம் செய்யாமலே இருந்து வந்தாள். பின்னர் எனக்கு உதவுவதற்காக என்னைத் திருமணம் செய்து கொள்ளச் சம்மதித்தாள். சைவத் திருமுறைகளில் என்னை விட அதிக பாண்டித்யம் கொண்டவள்.

— அப்பணசாமி

# வட்டமேஜை




# விவேக்கைக் கழட்டிட்டீங்களே!

✉ தலையங்கம் தி.மு.க. தலைமைக்குச் சரியான எச்சரிக்கை மணியை அடித்திருக்கிறது. கலைஞர் 'அலர்ட்' ஆகப்போகிறாரா, அலட்சியப்படுத்தப் போகிறாரா என்பதை பொறுத்திருந்து பார்க்கவேண்டும்!
பொன்மலை,
ஆர்.பிரகாஷ்

✉ தி.மு.க. தகர்ந்து விடவில்லை என்பதை பொதுக்குழு நிரூபித்து விட்டது. கல்கி சற்று தடுமாறி விட்டது. தமிழகத்தில் ஒரே மாற்று ஆளுங்கட்சியாக... அதுவும் மதிக்கத்தக்க சாதனைகளை ஏற்படுத்தும் கட்சியாகத் தி.மு.க. விளங்கும். வெள்ளை வேட்டியில் பட்ட கறை போன்று இங்கொன்றும் அங்கொன்றும் கட்சித் தேர்தலில் பூசல்கள் பெரிதாகத் தோன்றுகிறது. இவற்றால் தகர்ந்து விடாது தி.மு.க.
திருவரங்கம் - 6, அ. சம்பத்

✉ நடுங்க வைக்கும் பாம்புகளை வைத்து நகைக்க வைக்கும் ஜோக்குகளை (ஸ்)நேக்காக வெளியிட்டு அதிர வைத்து விட்டீர்களே!
அயன்புரம்,
த. சத்தியநாராயணன்

✉ 'தினந்தோறும் தேனிலவு!' இலவச இணைப்பு அற்புதம். கணவன், மனைவியிடையே ஏற்படும் கருத்து வேறுபாடுகளை (தீர்க்கும் வழிகளை) எவ்வாறு களைவது என்பது பற்றி மிக அருமையாக எழுதியிருந்தீர்கள். இந்த இணைப்பு நிறையத் தம்பதிகளுக்கு ஒரு வரப்பிரசாதம்!
மொரட்டுப்பாளையம்,
இரா.வி. சௌந்தர்யா.

✉ பார்த்திபன் கனவு பட விமர்சனம் அமர்களமான பால் பாயசம் சாப்பிட்ட நிறைவையளித்தது. ஆனால், முந்திரிப் பருப்பில்லாததை போல ஒரு நெருடல். ஆம். விவேக் காமெடியை மட்டும் கழட்டிட்டீங்களே!
ஈரோடு - 1, சாந்தி கல்யாண்

✉ "பிரிக்க முடியாத அளவுக்கு அரசியல்வாதிகளும், வன்முறையும் இரண்டறக் கலந்து விட்டதுதான். இன்றைய நிஜம்" என்று செ.கு. தமிழரசன் சொல்லியிருப்பது நிதர்சன உண்மை. இதனால் வெட்கப் பட வேண்டியது நாம்தான்.
திருப்பூர் - 4, பா.சு.மணிவண்ணன்

✉ திராவிட முன்னேற்றக் கழகத்தின் உறுப்பினர் என்கிற முறையில் சொல்லிக் கொள்ள விரும்புவது தங்களின் தலையங்கம் கசப்பு. இருந்தாலும் கூட அது ஒரு மருந்து என்று கருதி தலைவர் கலைஞர் நடவடிக்கைகளில் இறங்குவாரேயானால் எதிர்காலத்தில் ஏற்றமிக்கதொரு கட்சியாக தி.மு.கழகம் விளங்கும் என்பதை மறுப்பதற்கு இல்லை.
பெங்களூர் _ 72, ப. மூர்த்தி

✉ புயல் பூக்கள் கட்டுரை அருமை. மகளிரின் திறமையை வெளிக்கொணரும் முதல்வரின் முயற்சிக்கு வாழ்த்துக்கள்.
கும்பகோணம், சித்ரா கிருஷ்ணமூர்த்தி

✉ "என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறவன் முதுகெலும்பு உள்ளவனா இருக்கணும்" எனும் நிஷா சர்மா, வரதட்சணை கொடுமைகளுக்கு எதிரான நல்ல ரோல் மாடல்.
திருவாரூர், எஸ். பாலச்சந்தர்

சிம்பு - த்ரிஷா காதல்தான் கோலிவுட்டின் லேட்டஸ்ட் டாப் நியூஸ்!

• இல.ரேணுகா தேவி, நகரி

? தமிழைக் கொலை செய்யும் ரேடியோ மிர்ச்சி எஃப்.எம். வர்ணனையாளர்களைப் பற்றி...?

! தமிழ்க் கொலையாவது பரவாயில்லையே; 'ரேடியோ மிர்ச்சி கேட்காதவங்களைப் புடிச்சு கட்டுத் தள்ளுங்கடா!' என்று அவங்களே விளம்பரம் செய்யறாங்களே... அது இன்னும் கேவலம் இல்லையோ!

• ப. இராம் முருகன், சென்னை - 81

? தமிழகத்தில் திராவிடக் கட்சியின் துணை கொண்டுதான் ஜெயிக்க முடியும் என்பது மூட நம்பிக்கை என்கிறாரே ப. சிதம்பரம்...?

! அது மூடநம்பிக்கை அல்ல; கணிதக் கட்டாயம். மூன்றாவது அணி என்பது எதிர்க் கட்சிகளின் வாக்குகளைப் பிரிப்பதற்கு மேலாக எதுவும் செய்யாது எனப் பலமுறை பார்த்து விட்டோமே! இதற்கு ஒரு பரிகாரம்தான் உண்டு: ஆட்சியில் இடம் கேட்டு கூட்டணி அமைப்பது.

# மாற்றுப் பயிர் செய்யலாம் என்கிறாரே முதல்வர்?

• மீடியா மேடம்!



• தப்புக் கணக்கு!



• கடவுள் அருள்...



• வி. ஆனந்தன், திருச்சி - 19

? தமிழக அரசு, மாணவர்களுக்குப் பேருந்து பயணச் சலுகையை ரத்து செய்தது சரியா...?

! மிதிவண்டி வாங்கக் கூட வழியில்லாத ஏழை மாணவர்கள்தான் பஸ் பாஸ் மூலம் அதிகம் பயனடைந்து வந்தனர் என்பதை நோக்க, அரசின் செயல்பாடு எப்படிச் சரியாகும்?

• பொன்விழி, அன்னூர்

? ஜோதிகா - சூர்யா திருமணம் உண்மையா...?

! அன்னூரார் கேள்விப்பட்டது செம ஓல்ட் நியூஸ்;

• கே. கணபதி, சென்னை - 11

? ஏழை, நடுத்தர மக்களுக்கான மானியத்தை அரசு ஏன் ரத்து செய்கிறது?

! அரசியல் நோக்கில், வோட்டுப் பிடிக்கும் உத்தியாகப் பல இலவசங்கள், மானியங்கள் இந்நாட்டில் அமல்படுத்தப்பட்டன. இன்று அவற்றை நிர்வகிக்கும் ஆற்றல், பொருளாதார வசதி இரண்டும் அரசுக்கு இல்லை. வாபஸ் பெற்றாலோ, மக்களின் கோபத்துக்கு ஆளாவோம் என்று பயம். இப்போது "உலக வங்கி சொல்கிறது" என்று பழிபோட வசதி உள்ளது. அதனால் நீக்கி விட அவசரம் காட்டுகிறது.

• டி.ஏ.சி. பிரகாஷ், திருச்செங்கோடு

? தமிழ் சினிமாவின் சமீபத்திய அரிவாள் கலாசாரம் பற்றி...?

! அழிவார் கலாசாரமாகத்தான் போய் முடியும்!

• எஸ்.கே.மூர்த்தி, கும்பகோணம்

? ரௌடிகளால் அரசியல்வாதிகள் வளர்கிறார்களா? அல்லது அரசியல்

வாதிகளால் ரௌடிகள் வளர்கிறார்களா...?

! முதலில் அரசியல்வாதிகளால் ரௌடிகள் வளர்கிறார்கள்; அப்புறம் ரௌடிகளால் அரசியல்வாதிகள் கௌரவம் இழந்து தாழ்வுற்றுப் போகிறார்கள்.

● கே.என். பாலகிருஷ்ணன், சென்னை - 91

? இரண்டாண்டுக் கால 'ஜெ' ஆட்சி மக்கள் மனத்தில் எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கிறது?

! ஏமாற்றம்தான் பிரதான உணர்வு. அதைச் சாதுர்யமாக ஜெயா டீவி. மூலம் திசை திருப்பி வியப்பை விதைக்க எடுக்கப்படும் முயற்சிகளும், முழுப் பக்க விளம்பரங்களும் எத்தனை தூரம் பலனளிக்கிறது என்பது தேர்தல் சமயத்தில் தெரியும். தமிழகத்தின் தலைவிதி புரியும்.

● ஜி. ஜெயராமன், கூத்தலூர்

? எது துணிச்சல்? எது அசட்டுத் துணிச்



* பழைய...



* ... செய்தி...

* ... புதிய ...

* ... சங்கதி!...



சல்?

! ஓடும் பஸ்ஸில் பிக்பாக்கெட் அடிப்பவனைப் பிடித்து போலீஸில் ஒப்படைப்பது துணிச்சல். ஓடும் பஸ்ஸை விடாமல் துரத்தி, குரங்கு மாதிரி, உயிர் போகும் லெவலில் தொங்கிக் கொண்டிருப்பது அசட்டுத் துணிச்சல்.

● இரா. சக்கரபாணி, மதுரை - 7

? இந்திய ஜனாதிபதியின் ரயில் பயணம் எதைக் காட்டுகிறது...?

! கடவுள் புண்ணியத்தில் அவரது ஆயுள் கெட்டி என்பதை... அவர் பயணம் செய்த அதே ரயில்வே பிரிவில் மறுநாள் ஒரு ரயில் தடம் புரண்டிருக்கிறது - தண்டவாள ஸ்லீப்பர்கள் நீக்கப்பட்டதால்!

● வைப்பூர் இ. சிவக்குமார்,
சென்னை - 73

? சமீபத்தில் நீங்கள் படித்த மறக்க முடியாத விஷயம்...?

! 'சிம்பு டான்ஸோ ஏ கிளாஸ்!

படமோ பக்கா லோ கிளாஸ்' என்று 'தம்' படத்துக்கு வெளியிடப்பட்ட விளம்பரம். அதிர்ச்சியிலிருந்து இன்னும் மீளவில்லை.

● மரகதம் சம்பத்,
வேலாயுதபட்டணம் *

? தமிழ்நாடு, பல விஷயங்களில் முன்னணி வகிக்கத் தொடங்கி விட்டதாகப் பத்திரிகைகள் கணிக்கின்றனவே.... இது சரிதானா?

! 'கணிப்பு'க்கு அடுத்த பக்கமே தமிழக அரசு விளம்பரம் அச்சாகியிருப்பதைப் பார்த்து நீங்களே புரிந்துகொள்ள வேண்

* வன்முறை

டாமா...?

● டி. சுப்ரமணியம், மேலையூர்

? டெல்டா பகுதியில் காவிரி நீர் வராததால் விவசாயிகள் மாற்றுப் பயிர் வளர்க்கலாம் என்கிறாரே முதல்வர்...?

! நீண்ட காலத் திட்டமாகத்தான் அது அமலாக முடியும். மாற்றுப் பயிர் முறை பற்றி விவரமும் பயிற்சியும் தேவை. அரசு இந்நேரம் அவற்றை விவசாயிகளுக்கு வழங்கியிருக்க வேண்டும்; வாய்ச் சொல் போதாது. ஆனால் மாற்றுப் பயிர் திட்டத்துக்குக்கூட, தண்ணீர் போதிய அளவில் இல்லை என்பதுதான் பயங்கர உண்மை.

● த. சத்தியநாராயணன், அயன்புரம்

? உலகமே அறியாத இரண்டு வயதுக் குழந்தைகளைப் பள்ளியில் சேர்ப்பது சரியா...?

! கொஞ்சமும் சரியல்ல. விளையாட்டுப் பருவத்தில் விளையாடுவதும், ஜாலியாக சுற்றுவதும்தான் குழந்தை மனத்துக்குத் தேவை. இந்த நேரத்தில் ப்ரீ.கே.ஜி., எல்.கே.ஜி. என்று மூட்டைகளை முதுகிலும், பாரத்தை மனத்திலும் சுமப்பது எந்தப் புண்ணியவான் ஆரம்பித்து வைத்த கொடுமையோ தெரியவில்லை. பாவப்படத்தான் முடிகிறது.

● ஜி. குப்புசாமி, சங்கராபுரம்

? காதல் எப்படி உருவாகிறது? செய்கையிலிருந்தா? சொல்லிலிருந்தா...?

! மனத்திலிருந்து.

● ப. ராமகிருஷ்ணன், காயக்காடு

? மற்ற பத்திரிகைகளெல்லாம் கவர்ச்சியைக் கட்டவிழ்த்துவிட்டு விற்பனையை அதிகரிக்க முயற்சி செய்து கொண்டிருக்க, கல்கி மட்டும் எந்த தைரியத்தில் கவர்ச்சிக்கு 'நோ' சொல்லி இதழைக் கட்டுக் கோப்பாகக் கொண்டு வருகிறது...?

! காயக்காடு ப.ராமகிருஷ்ணனைப் போன்ற வாசகர்கள் இருக்கும் தைரியத்தில்தான்.

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
இல. ரேணுகாதேவி, கே.ஜே. ரெட்டி அபார்ட்மெண்ட்ஸ், நாகலாபுரம் ரோடு, நகரி, சித்தூர் - 517 590

* ரூ.50 பரிசு பெறுபவர் :
மரகதம் சம்பத்,
வேலாயுதபட்டணம் (அஞ்),
பெரியகாரை (வழி),
சிவகங்கை மா.வ.

# இனி எல்லாமே ஈஸிதான்!

**இண்டர்வியூக்குப் போனா இங்கிலீஷ்,**
**ஈ-மெயில் அனுப்பணும்னா இங்கிலீஷ்,**
**கம்ப்யூட்டர் கத்துக்கணும்னா இங்கிலீஷ்,**
**கணவருடன் பார்ட்டிக்குப் போனா இங்கிலீஷ்,**
**பசங்க படிக்கற ஸ்கூலுக்குப் போனா இங்கிலீஷ்,**
**எங்கே போனாலும் இங்கிலீஷ்.. இங்கிலீஷ்.. இங்கிலீஷ்!**

என்ன... மற்றவர்கள் இங்கிலீஷில் பேசுவதை உங்களால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் அவர்களிடம் உங்களால் சகஜமாக இங்கிலீஷில் பேச முடியவில்லை. ஏதாவது தவறாகப் பேசிவிடுவோமோ என்று தயக்கமாக இருக்கிறது!

**இதுதானே உங்க ப்ராப்ளம்? NO PROBLEM!**

உங்களது ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் செலவிட்டால் போதும்!

**ஸ்பீச் ஜெனரேட்டிங் ஃபார்முலா SGF™** அடிப்படையில் நாங்கள் அமைத்துள்ள ஓர் எளிய பயிற்சியின் மூலம் நீங்கள் ஈஸியாக இங்கிலீஷ் பேசக் கற்றுக் கொள்ளலாம்.

கடந்த 22 ஆண்டுகளில் 15 லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் எங்களது **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸின்** மூலம் பயனடைந்துள்ளனர்.

வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் செலவிட்டு எங்களது பாடங்களைப் பிராக்டிஸ் செய்தால் போதும். **தயக்கமின்றி இங்கிலீஷ் பேச உங்களால் முடியும்.**

கீழே உள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து இன்றே அனுப்புங்கள். பாடங்களை V.P.P. மூலம் உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம். தபால்காரரிடம் ரூ.395/- செலுத்திப் பெற்றுக் கொள்ளவும்.

கோர்ஸ் பாடங்களை தினசரி அரைமணி நேரம் பிராக்டிஸ் செய்து, மடமடவென இங்கிலீஷில் பேச ஆரம்பியுங்கள்.



**இதோ கூப்பன்**



நானும் விவேகானந்தாவின் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில் சேர விரும்புகிறேன். எனக்குப் பாடங்களை V.P.P. மூலம் அனுப்புங்கள். தபால்காரரிடம் ரூ.395/- செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

பெயர் : ............................................................

முகவரி : ............................................................

............................................................

............................................................பின்கோடு............................

கூப்பனை 15 நாட்களுக்குள் அனுப்புவோருக்கு பாடங்களுடன் 416 பக்கங்கள் கொண்ட இங்கிலீஷ்-தமிழ் டிக்ஷனரி இலவசம்.

**VIVEKANANDA INSTITUTE**



9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை - 600 017.

EKL

விவேகானந்தாவின்
**ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸ்**
இனி தடையேதுமில்லை இங்கிலீஷ் பேச...

02 / TAM / 03 / NAGA

# சீதா ரவி

**வா**ழைக்காயை அழுத்தி அழுத்தித் தேய்த்துச் சீவினாள் காந்திமதி. நமக்கு வேண்டாதவர்களின் தலைகளையெல்லாம் இப்படித் தேய்த்துச் சீவித் தள்ள முடிந்தால் எத்தனை சௌகரியமாய் இருக்கும்! - குறிப்பாக ஜெர்ரி பிரவுன்! அவனும் அவன் அலையும் தலை முடியும் அதைவிட அலைகின்ற அவன் கோணல் கண் பார்வையும்!

'ஹலோ! நான் நவநீதாவைப் பார்க்கணும்... வாசல் கதவைத் திறந்து பார்த்தால் முறம் முறமாகக் கையும் காலும், மிரட்டுகிற தோள் கட்டுமாக நிற்பான். அவனை மோப்பம் பிடித்து விட்ட பொமரேனியன் போல் நவநீதா தடதடவென்று மாடிப் படிக்கட்டுகளில் இறங்கி ஓடி வருவாள். அவ்வளவுதான்; மறுகணமே அந்தக் கையும் காலும் பின்னி முடிச்சுப் போட்டுக் கொண்டு சிடுக்கில் அவஸ்தைப்படும்!

இந்த செம்பட்டைத் தலையனைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன் என்று நவநீதா அநியாயத்துக்கு அடம்பிடிக்கிறாள். அவனும் அவளைக் காதலிப்பது தனது பிறப்புரிமை போல்தான் நடந்து கொள்கிறான்.

"இந்தியாவில் இருந்திருந்தால் இப்படி ஒரு இச்சட்டு வந்திருக்குமா? செருப்பு துடைப் பக்கட்டை எல்லாம் பிய்ஞ்சிருக்காதோ!" - ப்ருத்வி அப்பாவிடம் இவ்வாறு புலம்பிக் கூட ஆற்றிக் கொள்ள முடியாது.

நவநீதாவுக்கு ஏழு வயது நிரம்பியபோதே அவர் திரும்பிப் போய் விடலாம் என்றார். ப்ருத்விக்கு அப்போது பன்னிரண்டு. வேண்டவே வேண்டாம் என்றவள் காந்திமதிதான். "எந்தச் சீமையானாலும் என் குழந்தைங்களை நச்சுப் படாம நான் வளர்ப்பேன்" - பெற்ற தாயின் மேல் ஆணையாய், பிறந்த நாட்டின் மேல் ஆணையாய் சிவகாமிக்கு அடுத்தபடி திருமதி சொக்கலிங்கம்தான் என்னும் அளவுக்குச் சபதமே செய்தாள் காந்திமதி.

தாய்நாட்டுச் சுற்றமும் நட்பும் நாள் தவறாது இவர்களைக் கண்டு பொறாமை கொள்ள வைக்கிற டாலர் சம்பளம். அதை ரூபாயாக மாற்றிப் பார்த்து மாளாமல், சமீபகாலமாகத்தான் முயற்சியைக் கைவிட்டிருக்கின்றனர் பட்டுக்கோட்டை மதனியும் பாபநாசம் ஓரகத்தியும்.

இந்நிலையில் திரும்பிப் போனால் இவன் கௌரவம் என்னாவது?

மூக்கொழுகும் பிள்ளைகளோடு பிள்ளைகளாக, நவநீதாவும் ப்ருத்வியும் இனி பள்ளிக்குப் போவதென்பது நினைத்துப் பார்க்கிற விஷயமா?... இந்திய ஜலதோஷம் எத்தனை கொடுமையானது! நாசூக்காய் வந்து போகிற அமெரிக்க ஜலதோஷத்துக்கு, உறை போடக் காணாது.

மேலும், வேலைக்காரி வராத தினங்களில்



# ஆராதனை

மினிதொடர்

சாம்பலும் அரப்பும் கலந்து தேங்காய் நார் கொண்டு பாத்திரம் தேய்க்க யாரால் ஆகும்?

இங்கே பாத்திரங்களைச் சுடுநீரில் கழுவி டிஷ்வாஷரில் போட்டு விட்டுத் தூங்கப் போய் விட்டால், காலையில் கல்யாணச் சீர் வைக்கிற அளவுக்குத் துப்புரவாகி விடும். அந்த இயந்திர கைங்கர்யத்தை இங்கே கணக்கமின்றிச் செய்யும் கணவன்மார்கள் தாய்த்திருநாட்டுக்குப் போனால் 'கால் மேல் கால்; கை மேல் காப்பி' என்று தடம் புரண்டு விடுகிறார்கள்.



பதி சேவை, பிள்ளைகளுக்குப் பேன் பார்ப்பது என்று போக்கிய நேரம் போக, பாட்டு கிளாஸுக்கோ, பெருமாள் கோயில் திருப்பணிகளுக்கோ என்ன மிஞ்சும்?

எல்லாம் கிடக்கட்டும்— ப்ருத்வி அப்பாவை இங்கே அழைப்பது போல் ''டாடி'' (daddy) என்று நினைத்த நேரத்தில் நினைத்த டெலிபலில் அங்கே அழைக்க முடியுமா?

இங்கே வந்ததே பிள்ளைகளுக்கு வளமான வாழ்க்கை அமைத்துத் தர வேண்டும் என்ற உயர் நோக்கில்தானே?... இப்போது இடைவெட்டித் திரும்ப வேண்டும் என்றால் என்ன அர்த்தம்!...

காந்திமதியின் இமைகள் அதுகாறும் கட்டி வைத்த நயாகராவை அவிழ்த்து விடுவதாக அச்சுறுத்த...

மனைவியின் கண்ணீரைக் சுரண சகியாத மென் மனம் படைத்த வீரரான சொக்கலிங்கம் தாய்நாடு திரும்பும் யோசனையை அன்றே, அப்போதே, காசிக்குப் போன வைராக்கியத்துடன் கைவிட்டார்.

1

ஜெர்ரி பிரவுன் தயவில் வாழைக்காய் வறுவல் சன்னமாய்ச் சீவப்பட்டு சுவையாய் அமைந்திருந்தது. கம்மாவா! இந்தியா ஸ்டோரில் சொல்லி வைத்துப் பிரத்யேகமாக ஃப்ளாரிடாவிலிருந்து வரவழைத்த காய்கள். வேண்டும் என்று கேட்டு விட்டால், விளாமிச்சை

வேர் முதல் வில்வக்காய் வரை சகலத்தையும் வரவழைத்துத் தந்து விடுகிறார்கள்.

இந்தியா, அட்லாண்டிக்கைக் கடந்தோ, பசிஃபிக்கைத் தாண்டியோ இங்கே சுலபமாக வந்து விடுகிறது. ஊர் எல்லையில் பெருமாள், பேதம் எதுவும் பாராமல் சேவை சாதித்துக் கொண்டிருக்கிறார். குளிர் - மழை கருதாது குருக்களும் பட்டரும் வெற்றுடம்போடு முக்காலமும் பூஜை செய்கிறார்கள். பத்துப் பேர் கூடிவிட்டால் பெருமாளுக்கு போனஸாக விஷ்ணு சஹஸ்ரநாமம் கூட ஓதப்படுகிறது. பெருமாளுக்கு வஸ்திரம் வாங்குகிறபோது நமது பட்டுப் புடைவை அணிவகுப்பையும் பலப் படுத்திக் கொள்ள முடிகிறது...

...சகலமும் மனதுக்குகந்ததாய்த்தான் இருக்கிறது; ஜெர்ரி பிரவுனுடன் நவநீதா கொண்டுள்ள சகவாசம் நீங்கலாக!

**வ**றுத்த வாழைக்காய்களுக்கு உப்பு - காரம் தூவி குலுக்குகையில் வீடே குலுங்க உள்ளே நுழைந்தாள் நவநீதா. பொத்தென விழுந்த அவளது அறுபது கிலோ தேகத்தை, கோபிக் காமல் உள்வாங்கிக் கொண்டது சோஃபா. ஷூக்களைக் கால்களிலிருந்து பிடுங்கி, ஸாக்ஸ்களை உரித்தெடுத்து விட்டு, கால்களை நீட்டித் தலையைச் சிலுப்பி, பின்னே சாய்த்தாள்.

"ஹாய் மாம். வாட்ஸ் ஃபார் டின்னர்...?"

"ஏண்டி இப்படிப் புயல் மாதிரி நுழை யறே...? கொஞ்சம் பதவிசா இருக்கத் தெரி யாதா?..."

"வாட்ஸ் தட் பதவிசா? இஸ் தட் ஸம் நியூ கைண்ட் ஆஃப் விஸா தட் தி கான்சலேட் ஹாஸ் இன்ட்ரட்யூஸ்ட்?"

"நக்கலுக்கு ஒண்ணும் குறைச்சலே இல்லே... வீட்டுக்கு வந்தா தமிழ்ல பேசுன்னு எத்தனை தடவை சொல்லிருக்கேன்..."

"ஸாரி மாம்! ஹை! வாழைக்காய் சிப்ஸ்...!"

"செஞ்சு வைச்சா நல்லா சாப்பிடத் தெரியுது... ஒரு குழம்பு - ரஸம் வைச்சு நாலு பேருக்குச் சாப்பாடு செய்ய கத்துக்கோடீன்னா வணங்குதா...? உடம்பு முழுக்க சோம்பல்."

"யாருக்கு சோம்பல்? எனக்கா?.... ஒரு நாளைக்குப் பதினெட்டு மணி நேரம் வேலை செய்யறேன். இந்த ஒன் இயர்ல இந்த மிட் வெஸ்ட் ரீஜியன்ல பாலிஸீஸ் டபுள் ஆகி யிருக்கு. இன்னைக்குத்தான் என் பாஸ் கூப்பிட்டு கங்கிராஜுலேட் பண்ணார். இன்னும் ஆறு மாசத்துக்குள்ளே எனக்கு புரமோஷன். நவநீதா சொக்கலிங்கம், வைஸ் பிரெசிடென்ட், சன்ஷைன் இன்ஷூரன்ஸ் எப்

''அந்தாளு அரசியலுக்கு வர்றதுக்கு முந்தி சாராயம் காய்ச்சி விற்பனை பண்ணினாராம்...''
''அதான் ஊழல்னு சொல்றதுக்குப் பதிலா ஊறல்... ஊறல்னு சொல்றாரா?''
— சீர்காழி வி. ரேவதி



படியிருக்கு? கேட்கவே பட்டர்ஸ்காட்ச் ஐஸ்க்ரீம் மாதிரி இல்லே... அப்புறம் உன் பெண்ணைப் பார்க்க நீ ஃப்ளைட் புடிச்சு நியூயார்க் வரணும்."

"முதல்ல டீசன்ட்டா ஒரு பையனைப் பார்த்துக் கல்யாணம் பண்ணி வைக்கறோம். அப்புறம் நீ நியூயார்க் போவியோ நார்த் போல் போவியோ உனக்காச்சு - அவனுக்காச்சு."

"இது டபுள் இன்ஸல்ட். முதல் அவமானம் - நீ பார்த்துத்தான் எனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கணும்னு நினைக்கறது. எனக்கா தேடிக்க மூளை கிடையாதுன்னு ஆகிப் போகுது... இரண்டாவது, டீசண்டா ஒரு பையனைப் பார்க்கப் போறேன்னு சொல்றது. அப்படின்னா உன்னைப் பொறுத்தவரையில ஜெர்ரி பிரவுன் இஸ் நாட் எ டீஸன்ட் கை... இல்லியா?... ஸாரி, யூ ஆர் டபுளி அண்ட் டோடலி மிஸ்டேகன். அண்ட் யூ வில் பி ஸாரி ஃபார் திஸ்..."

**ந**வநீதாவின் நடைக்குப் பத்து வருடங்களாகப் பழகிய படிக்கட்டுகள்தான் அவை. ஆனால் அன்று அவற்றைக் கடப்பதில் அவள் காட்டிய புதிய வேகத்தில் அவை நடுநடுங்கிப் போயின.

மேலே அவள் அறைக் கதவு அறைந்து சாத்தப்படும் சப்தம் கேட்டது... அப்புறம் நிசப்தம்!

"**பு**யல் வரப் போகுது காந்தி. ரேடியோவுல டொர்னாடோ வார்னிங் கொடுத்துட்டே இருக்காங்க." சொக்கலிங்கம் கோட்டைக் கழற்றி அலமாரியில் மாட்டியபடி சொன்னார்.

''இனிமேயா வரணும்? நம் வீட்ல வீசிக்கிட்டிருக்கு இப்போ..."

"என்ன சொல்றே...?"

"தற்காலிகமா போய் அறையிலே பதுங்கியிருக்கு. மீண்டும் எந்த நிமிஷம் வேணாலும் வெளிப்பட்டுத் தாக்கும்..."

"குழந்தை வீட்டுக்கு வந்துட்டாளா?"

"ஆமாம், குழந்தை! அந்த செம்பட்டைத் தலையனைக் கட்டிக்குவேன்னு தலைகீழா ஆட்டம் போடறா, அவளா குழந்தை...! வேண்டாண்டின்னு சொன்னா, இதோட பலனை நீயே அனுபவிப்பேன்னு எனக்குச் சாபமிட்டுட்டுப் போயிருக்கா... என்னையும்தான் எங்கப்பாம்மா நவீனமா வளர்த்தாங்க. ...அதுக்காக நான் இப்படியா அடங்காப் பிடாரியா ஆடினேன்?... அப்பா அம்மா பார்த்து வைச்ச பையன்றதுக்காக கண்ணை மூடிக்கிட்டு உங்களுக்குக் கழுத்தை நீட்டலை...?"

**ச**ம்பந்தப்பட்டவர்கள் எல்லாருமே கண்ணை இறுக்கி மூடிக் கொள்ளாவிட்டால் மேதினியில் ஒரு கல்யாணம் கூட நடைபெறாது என்கிற ஆழமான உண்மை அக்கணத்தில் சொக்கலிங்கத்தின் மூளையில் உதயமாயிற்று. ஆனால் அத்தகைய தத்துவார்த்த விளக்கங்களில் காந்திமதிக்கு தற்சமயம் ஈடுபாடு வராது என்பதுணர்ந்து அவர் வசனம் வடித்தார்.

"அதுக்குத்தான் அப்பவே இந்தியாவுக்குத் திரும்பிப் போயிடலாம்னு சொன்னேன்... நீ கேட்கல்லே..."

"ஆமாம்! எல்லாத்துக்கும் என் தலையிலயே பழியப் போடுங்க." ரெடிமேட் நயாகரா அந்தக் குண்டுக் கன்னங்களில் வழிந்தோட, அதைக் காணச் சகியாது சொக்கலிங்கம் தவித்தார்.

வாசல் மணி ஓசை கைகொடுத்து அவரைக் காப்பாற்றியது. விரைந்து கதவைத் திறந்தார்.

ஜெர்ரி பிரவுன்!

"ஹலோ! நைஸ் ஈவனிங்க... ஐம் ஹியர் டு ஸீ நவ்நீடா..."

இன்றைக்கு இரண்டில் ஒன்று முடிவு செய்வதென்ற உறுதியில் அவனை உள்ளே அழைத்தார் சொக்கலிங்கம்.

"தேங்க்யூ'' என்று அவர் காண்பித்த இருக்கையில் அமர்ந்த ஜெர்ரி, காந்திமதியின் முகம் அழுது - கோணிக் கிடப்பது கண்டு விக்கித்தான்.

"என்னாச்சு...? ஏதேனும் பிரச்னையா...?"

"நீதான் பிரச்னை!" என்றார் சொக்கலிங்கம்.

(தொடரும்)

ஏறு நூறு 17



# மாற்றங்களுக்குத் தயாராக இருங்கள்

**ரா**மசாமி ஒரு பெரிய நிறுவனத்தில் சிறிய பதவியில் சேர்ந்து, இருபது வருடங்களில் ஓர் அதிகாரியாக உயர்ந்தார். அவ்வப்போது தாம் கடந்து வந்த பாதையை நினைத்துப் பார்த்துக் கொள்ளுவார். மகிழ்ச்சியான தருணங்களை நினைவில் கொள்ளும்போது, ஒரு பெருமிதம் ஆட்கொள்ளும். ஆனால் கடந்த காலம் போலவே இனி வரும் காலமும் இருக்குமா, என்ற கவலை திடீர் திடீர் என்று அவருக்குள் எழும்!

குறிப்பாக, மாற்றங்கள் நிகழும்போதும், புதிய இளைஞர்கள் நிறுவனத்தில் சேரும் போதும், கம்ப்யூட்டரின் முழுப் பயனையும் தாம் இன்னும் உணரவில்லையோ என்று தோன்றும்போதும், என்னவென்று விவரிக்க முடியாத அச்ச உணர்வு தலை தூக்கும்.

இது சாதாரணமாக எல்லா ஊழியர்களுக்கும், ஒரு குறிப்பிட்ட பணிக் காலத்துக்குப் பின் ஏற்படுகிற நிலைதான். ராமசாமி இதற்கு விலக்கல்ல. (இதை ஆங்கிலத்தில் 'மிட் கேரியர் ப்ளூஸ்' என்பார்கள்.) இதற்கான உண்மைக் காரணத்தைப் புரிந்து கொள்ளுவது அவசியம். ஏன் இந்த உணர்வு எழுகிறது? பயம் எதன் காரணமாக? பாதுகாப்பின்மையாலா? ஒன்பது மணி முதல் ஐந்து மணி வரை ஒரே மாதிரி வேலை பார்த்து உண்டான தளர்ச்சியா?

எதுவானாலும் இவற்றை எதிர்த்துப் போராட வேண்டும். இதற்கு முதல்படி, நெகடிவ் எண்ணங்களை அறவே ஒதுக்கி, பாஸிடிவ் சிந்தனைகளை மட்டுமே அனுமதிப்பதுதான். 'அட இருபது வருஷத்துல என்ன எல்லாம் சாதிச்சிருக்கோம்!' என்று பழைய வெற்றிகளைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்காமல், அதே போன்ற வெற்றிக் கதைகளை மறுபடி நிகழ்த்த முடியுமா என்று யோசியுங்கள். உங்களைச் சுற்றி நிகழும் மாற்றங்களை எதிர்க்காமல், ஏற்றுக் கொள்ளப் பழகுங்கள். நீங்கள் பெரிதாக ஒன்றும்

ஆர். கண்ணன்



உங்களை மாற்றிக் கொள்ளத் தேவை இல்லை. அட்ஜஸ்ட் பண்ணிக் கொள்ளத் தயாராக இருங்கள். சவாலை எதிர் கொள் ளும் மனப் பக்குவத்தை உருவாக்கிக் கொள் ளுங்கள். புதிய தொழில்நுட்ப முன்னேற் றங்களைப் புரிந்து கொள்ளுவது ஆரம் பத்தில் சிரமமாக இருக்கும். ஆனால் அவை பற்றிய புத்தகங்களைப் படிப்பதும், அவை சம்பந்தமான கோர்ஸ்கள், பட்ட றைகள் நடந்தால் அவற்றில் சேர்ந்து உங்களைத் தயார்ப் படுத்திக் கொள்ளு வதும் மிகவும் உதவியாக இருக்கும். இதைத் தான் 'அப்டேட்டிங்' என்பார்கள்.

உங்களுக்கு ஏற்கெனவே இருந்த திறமை இன்றைய வேலை வாய்ப்புகளுக்கு உதவாது என்று உணரும் போது, மேற்படி பயிற்சி வகுப்புகள் நிச்சயம் கைகொடுக் கும். இப்போது பல நிறுவனங்களில் இரண்டு – மூன்று வருடங்கள் வெளியே இருந்து வேறு பயிற்சிகளை மேற்கொள்ளத் தேவையான விடுமுறை தருகிறார்கள். உங்கள் ஆற்றலை விரிவு படுத்திக் கொள்ள இந்த 'இடைவேளை' உதவும்.

இன்றையச் சூழலில் பல நிறுவனங்கள் இளம் அதிகாரிகளையும், 'சிஇஓ' எனப் படும் தலைமை அதிகாரியையும் நியமிக் கவே விரும்புகிறார்கள். இவர்களிடம் அனுபவமும் புத்துணர்வும் கலந்திருக்கும் என்று எதிர்பார்க்கிறார்கள். இவர்கள் வரவால் அலுவலகச் சூழ்நிலையில் ஒரு மாற்றமே நிகழ்ந்து விடுகிறது. பணிக் கலாசாரம் கூட மாறுகிறது. வழக்கமாக இருந்து வரும் எசமான் – ஊழியர் என்ற உறவே மாறி, நண்பர்கள் போல் நடந்து கொள்ளும் நிலை தோன்ற ஆரம்பிக்கிறது. இதன் காரணமாக, பழைய ஊழியர்கள் கூட, தங்களுக்கு எது வசதியாக இருந் ததோ அதை விட்டுக் கொடுத்து, புதிய சூழ்நிலைக்குத் தாங்களும் தயார் என்பது போல மாறி வருகிறார்கள்.

உங்கள் பணி வாழ்க்கைக்கும், சொந்த வாழ்க்கைக்கும் இடையே ஆரோக்கிய மான சமநிலையைக் கடைப்பிடிக்கப் பாருங்கள். ஒன்றில் இன்னொன்று குறுக் கிட அனுமதியாதீர்கள்.

**கா**ர்ப்பரேட் படிகளில் விறுவிறு என்று ஏற அசாத்திய சுறுசுறுப்பு அவ சியம். 'டைனாமிஸம்' இன்றைக்கு அதிக மாக அடிபடுகிற வார்த்தை. நிறுவனங் களுக்குள்ளேயே ஊழியர்களுக்கு அளிக் கப்படும் பயிற்சி வகுப்புகள் இப்போது பெருகி வருகின்றன. இவை தவிர, ஊழியரும் தனக்கு விருப்பமான பயிற்சி வகுப்புகளில் சேர்ந்து தன்னை உயர்த்திக் கொள்ள முயலுவது கூடுதல் பயன் தரும்.

உங்கள் அதிகாரிதான் உங்கள் பணி களை எடைபோட வேண்டும் என்று காத் திருக்காதீர்கள். அவ்வப்போது நீங்களே உங் களை எடைபோடுங்கள். எந்தப் பணி களில் உங்கள் பலவீனம் இருக்கிறது என்று புரிந்து கொண்டு, அதைக் களைய முயலுங்கள்.

வருடக் கடைசியில் உங்கள் பணிகளை எடைபோட்டுக் குறிக்கப்படும் நேரம் வரை காத்திராமல், உங்கள் அதிகாரிகளை அணுகி, உங்கள் பணித்தரம் எப்படி இருக் கிறது என்று கேட்டு அறிந்து கொள் ளுங்கள். எந்தப் பணிகளில் நீங்கள் சிறந்து விளங்குகிறீர்கள், எவற்றில் குறைபாடு என்று அறியுங்கள்.

உங்கள் அலுவலகத்திலேயே நிகழும் மாறுதல்களைக் கவனியுங்கள். புதிய பிராஜக்ட்டுகளில் உங்கள் திறமை பயன் தருமானால், உங்கள் மேலதிகாரியிடம் அது குறித்துப் பேசுங்கள். வெளியுலகில்,

## தப்பு செய்யாமல் தப்பு

**பெ**ரியவர்கள் நம் தவறைச் சுட்டிக் காட்டினால் மகிழ்வுடன் ஏற்க வேண்டும். தந்தை 'தப்பு' என்று சொல்கிறார் என்றால் என்ன பொருள்?

'தம்பி! உன் வேட்டி அழுக்காக இருக் கிறது. அழுக்கு வேட்டியை நீ கட்டுவது 'தப்பு'. கட்டினால் சொறி சிரங்கு வரும். அதிலிருந்து நீ 'தப்பு'. ஆகையால் வேட் டியை ஆற்றில் கொண்டு போய் 'தப்பு' (அடித்துத் துவை) என்று ஒருவர் அறிவுரை கூறினால் அவர் பின் னால் வரும் ஆபத்தி லிருந்து 'தப்பச் சொல்கிறார் என்று அர்த்தம்.




(பொ.ம.ராச மணியின் நூலிலிருந்து)
– தங்கவேல் சரவணன்

நிகழ்ந்து கொண்டிருந்தால், அவற்றை அறிந்து கொள்ளுங்கள். இது முக்கியம். நிறுவனத்தில் சிலர் அதிகப்படியாக இருக்கிறார்கள் என்ற நிலைமை வரும்போது வெளியேற்றப்படும் நபர்களில் ஒருவராக நீங்கள் இருந்துவிடக் கூடாது.

**வா**ழ் நாள் முழுக்க ஒரே நிறுவனத்தில் பணி புரிவது என்பது மெல்ல மெல்ல மறைந்து கொண்டு வருகிறது. புதுப்புது வாய்ப்புகள் பெற புதுப் புது தகுதிகள் தேடிக் கொள்ள வேண்டியிருக்கிறது. இதன் காரணமாகவே மாறும் சூழ்நிலைகளுக்கு ஏற்ப, ஊழியரும் தம்மை மாற்றிக் கொள்ளும் கட்டாயம் உருவாகி வருகிறது.

முடிவாக —

பள்ளிக் கல்வியின் போது கேரியர் பிளானிங் தொட்டு, வேலைக்கான 'ரெஸ்யும்' தயார் செய்து, வேலையில் அமர்ந்து, எதிர்காலத்தை அமைத்துக் கொள்ளுவது வரை வந்து விட்டோம். 'கேரியர் பிளானிங்' போலவே, 'கேரியர் டெவலப்மெண்ட்'டும் முக்கியம். இதோ சில டிப்ஸ்:

● மாற்றங்களை முணுமுணுக்காமல் ஏற்றுக் கொள்ளுங்கள். உங்களை மாற்றங்களுக்குத் தயார்ப்படுத்திக் கொள்ளுங்கள்.

● திட்டமிடுதலும், ஒரு குறிப்பிட்ட பிரச்னையில் முடிவு எடுப்பதும், கற்க வேண்டியவை; பயிற்சியினால் அடையக் கூடியவை; இதற்குத் தகவல்கள் திரட்டுவதும், மாறுபட்ட உத்திகளைக் கண்டறிவதும், எதைச் செய்தால் சரியாக இருக்கும் என்ற சீர்தூக்கிப் பார்க்கும் சிந்தனையும் அவசியம்.

● உங்கள் ஆர்வம், அக்கறை, திறமை, திறன் இவற்றைச் சரிவர புரிந்து கொண்டு செயல்படுங்கள்.

● பழைய அனுபவங்கள், புதிய தேவைகளைக் கையாளுவதில் குறுக்கிடலாம். சரியாக அடையாளம் கண்டு கொண்டு, அவற்றைப் பயன்படுத்துங்கள்.

● கடைசி வரை 'ஒரே ஒரு வேலை' என்பது எப்போதும் சரியாக அமையாது. வாழ்நாளில் பல வேலைகளில் சேர்ந்து பணியாற்றி வெற்றி பெற வாய்ப்புகள் நிறைய வரும். அப்போது புத்திசாலித்தனமான முடிவுகளை எடுங்கள்.

● தன்னம்பிக்கை முக்கியமானதுதான். தன்னால் எந்த வேலை செய்ய முடியும் அல்லது முடியாது என்பதைத் தீர்மானிக்கும் ஆற்றலும் அவசியம். கூடவே ஓய்வு நேர விருப்பப் பணிகள், நண்பர்களின் நட்பு, தொண்டு சார்ந்த வேலை, இவற்றையும் தொடர வேண்டும்.

● அதிர்ஷ்டத்தை விரும்பலாம்; ஆனால் அதையே நம்பி இருக்காதீர்கள். எந்தப் பொறுப்புக்கும் தயார் நிலையில் நீங்கள் இருக்கும் பட்சத்தில், வாய்ப்பு வரும்போது உடனே பயன்படுத்திக் கொள்ள முடியும்.

● ஒரு வேலையில் அமர்ந்த பிறகு, ஆரம்பத்தில் இருந்த அதே உற்சாகம் தொடர்ந்தால்தான் உங்கள் பங்களிப்பு கணிசமாக இருக்கும். அந்த உற்சாகம் நீடித்து இருந்தால்தான், வெளியே வேறு வேலை வாய்ப்புகள் உங்களைக் கண் சிமிட்டி அழைக்கும்போது அவற்றை ஏற்கும் துணிச்சல் உங்களிடம் உருவாகும்.

இன்னொரு விஷயத்தையும் இங்கே குறிப்பிட்டாக வேண்டும்: கேரியர் நிர்வாகத்தில் பல நிபுணர்கள் இன்று சக்கைப் போடு போட்டு வருகிறார்கள். குழப்பமோ, பிரச்னையோ எழும்போது இவர்களை அணுகினால், எளிதாக மேம்பாடு அடையும் வழிகளைக் காண்பிப்பார்கள்.

ஆல் த பெஸ்ட்!

தமிழில் : **சாருகேசி**

மேலும் உங்கள் சந்தேகங்களுக்கு இந்த ஈ.மெயிலில் தொடர்பு கொள்ளலாம்.

response@careerindia.com



"அந்த டீக்கடைக்காரருக்குக்கூட காங்கிரஸ் கட்சின்னா இளக்காரமாப் போச்சு!"

''எதை வச்சு அப்படிச் சொல்ற?''

''தமிழகத்தில் காமராஜர் ஆட்சியை காங்கிரஸ் அமைக்கும் வரை இங்கு கடன் கிடையாதுன்னு எழுதியிருக்கிறாரே– பார்க்கலியா?''

- உ. குணசீலபாண்டியன்

ஜெய்ஸ்ரீ ராஜ்

"அடடா... சின்னப்பா தேவர் இப்ப இல்லாமல் போயிட்டாரே... இருந்திருந்தா அசால்ட்டா இந்தக் கதையை அள்ளிக்கிட்டிருப்பாரே..." அந்தச் சின்ன 'காஃபி ஷாப்'புக்குள் நுழைந்தவாறே காசி என் நண்பனிடம் சப்தமாக அங்கலாய்த்தான்.

பாதி வெயிலும் பாதி நிழலுமான இனி கொஞ்சிய சூழலில், அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிதறிக் கிடந்த முகங்களில் ஒன்றிரண்டைத் திரும்பிப் பார்க்க வைத்தது. அதில் ஒன்று சின்னக் கண்ணனுடையது. பார்த்த மாத்திரத்தில் சுருங்கியது. என்ன செய்ய? இந்தத் 'திரைக் கதைத் திலகம்' காசி சொன்ன ஒரு கதையைத்தான் தமிழிலும் இந்தியிலும் எடுத்துவிட்டு, ரிலீஸ் பண்ண முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார் அவர். அது தன் மலையாள நாவலின் அப்பட்டக் காப்பி என்று யாரோ ஒரு மலையாளக் கதாசிரியர் கேஸ் போட்டு விட்டார்.

ஆனால் காசி நேராக சினாகனாவைத்தான் குறி வைத்தான். "கவலைய உடுங்க அண்ணே; அந்த மலையாள நாவல் அப்படியே பழைய வங்காளிப் படத்தோட காப்பின்னு இப்பத்தான் 'ப்ரூஃப்' போட நம்ம லாயர்கிட்ட குடுத்துட்டு வரேன். அந்தப் பாடாவதி படத்தோட காஸட்டைத் தேடிப் பிடிச்சு, அதுக்கு சப் டைட்டில்ஸ் இங்கிலீஷ்ல போட்டு எடுத்து வர்றதுக்குள்ள பாதி உசுரு போயிடுச்சு..."

"அந்த வங்காளக்காரன் கேஸ் போடறச்ச மீதி உசுரு போகுமாக்கும்" - சினா கனா காட்டமாகப் பதிலிறுத்தார்.

"அப்படி ஒரு நிலமை வந்தா, ஒரிஜினல் மராட்டின்னு அடிச்சு சொல்ல ஒரு மராத்தி கிரிட்டிக்கைப் பிடிச்சு வைச்சிருக்கேன். அப்ப மராத்திவாலா வம்பு பண்ணுவாரான்னு அடுத்த கேள்வி கேக்காதீங்க; அந்த மனுசன் மண்டையைப் போட்டு ஒரு நூற்றாண்டாயிடுச்சு; காபி ரைட் உரிமைகள்ளாம் தெரியாத காலத்துல அவர் எழுதிட்டிருந்தாரு..."

"எழுத்தாணியாலயா?" சினா கனாவின் சினம் தணியவில்லை.

"அந்த ஓலைச் சுவடிங்கள்ளாம் சேகரிச்சு வச்சுட்டேங்க; இனிமே அதைப் பத்திக் கவலைப்பட வேண்டாம்; இப்ப என் சிந்தனை எல்லாம் சின்னப்பா தேவர் மாதிரி ஒரு தயாரிப்பாளர் கிடைப்பாராங்கறதுதான்! 'அழகான ஸப்ஜெக்ட்...' காசி லாவகமாகத் திசை திருப்பினான்.

"தேவ லோகத்துல வேணா தேடிப் பாரேன்..." சினாகனா கிண்டலடித்தார்.

"இது தேவலோகத்து ஸப்ஜெக்ட்தாங்க; நம்மவங்களுக்கு எங்க தோதுபடப் போவது? இவுங்கள்ளாம் 'ரூடி அவுர் முண்டா' டைப்புல எதையாவது எடுத்து சீக்கிரமா நாலு காசு பாக்கத்தான் லாயக்கு..." காசி விறைப்பானான்.

"என்னப்பா... ஏதோ கெட்ட வார்த்தையில இட்டறாப்புல இருக்கு?"

# "காப்பி" ரைட்ஸ்



சினா கனா உஷாரானார்.

"ஐயையோ... பஞ்சாபியில இதுக்கு 'ஒரு பொண்ணும் பையனும்'னு அர்த்தம். ரீமிக்ஸ்ங்கற பேர்ல பழைய பாட்டுங்களுக்கு பீட்ஸ் சேர்த்து, குருப்பா சில பெண் கோவணாண்டிகளையும், பர்தா போட்ட ஆண்களையும் ஆடவிட்டு, படமெடுத்து, விடியோ ஆல்பம்ங்கற அல்பத்தன்மான விஷயங்களுக்குத் தான் இவுங்க போடற முதல் காணும். இதெல்லாம் மஹா பெரிய பட்ஜெட். அநேகமா கான் ஃபெஸ்டிவல்ல பங்கெடுக்கற ரேஞ்சுக்கும், ஆஸ்கர் லெவலுக்கும் போகும்..." காசி அலட்சியமாகப் பார்த்த பார்வையே சினாகனாவை உசுப்பிவிட்டது.

"அப்படி என்னப்பா நம்மால டீல் பண்ண முடியாத சப்ஜெக்ட்...!" உறுமிச் செறுமினார்.



"திருவிழாவில் காணாமல் போன என் மனைவியை நெனைச்சா பயமாயிருக்கு."

"ஏன்?"

"ஒருவேளை திரும்பி வந்தால் 'என்னை ஏன் தேடிப் பிடிக்கலை'ன்னு சண்டை ஆரம்பிச்சுடுவா..."

- ஆர்.என். செழியன்

---

காசி ஒரு நோட்டம் விட்டான். ஒன்பதாம் நம்பர் டேபிளில் பளிச்சென்று ஒரு டார்ச்லைட் முகம் அந்த அரை இருட்டிலும் பிரகாசித்தது. ஒரு கனைப்புடன் காசி ஆரம்பித்தான்.

"இது ஜன்ம ஜன்மாந்திரத்துக் கதை; ஹீரோ வடக்கத்தியான்; ஹீரோயின் தென்னிந்தியக்காரி..."

"இப்பிடிப் பொதுப்படையாச் சொன்னா எப்படி? தமிழா, கன்னடமா, துளுவா, தெலுங்கா, மலையாளமா?" சினா கனா மனத்தில் தாம் பல காலமாக வாக்குக் கொடுத்து வைத்திருக்கும் அல்பா ஷெட்டி கண் சிமிட்டினாள்.

"இண்டர்நேஷனல் லெவலுக்கு இது போதும்; எப்படியும் ஹீரோயினா நடிக்கப் போற ஜென்னிஃபர் லோபெஸுக்கு இங்கிலீஷ் தவிர ஒண்ணும் தெரியாது..."

கதாநாயகி பெயரைக் கேட்டதும் அங்கிருந்த இதயங்கள் 'பம்'மிக் கொண்டு எழுந்தன.

"லோலோன்னு அலையறானுவ பாரு" என்று மனசுக்குள் கறுவிக் கொண்ட காசி, "பேட்ரிக்ஸ் ரீ லோடட்"னு இப்ப யுஎஸ்ஏல டாப்ல ஓடிட்டிருக்கிற படத்தோட ஹீரோ கியானு ரீவ்ஸ்தான் நமக்கு கதாநாயகனா நடிக்கப் போறாரு..."

"என்ன கியான் முயான்ற?"

"ஐயோ... அவரு மூணு படத்துக்கு முந்நூத்தி எழுபத்தஞ்சு கோடிக்கு ஹாலிவுட்ல காண்ட்ராக்ட் ஸைன் பண்ணியிருக்கற பெரிய ஆளு. கான் விழாவுல நம்ம ஐஸ் மூலமா பிடிச்சேன்... கதையைக் கேட்டதும் ஓகேன்னுட்டார்... பணத்தைப் பத்தி வாயே திறக்கலை" என்ற காசியிடம் "ஐஸை எப்பிடிப் பிடிச்சே" என்று சினா கனா கேட்கவில்லை. அப்புறம் ஐஸை கானுக்குச் சிபாரிசு செய்ததே தான்தான் என்ற கிளைக் கதைகளை யார் கேட்பது?

"சரி... மெயின் கதைக்கு வருவோமே" என்றார் பொறுமையிழந்த சினாகனா.

"கேளுங்க... குஜராத்துல ஒரு குக்கிராமம். ஒரே வறட்சி, ஆடு மாடெல்லாம் அம்பேல்; அப்ப ஒரு புலி திடீர்னு அந்தக் கிராமத்துல பிரவேசிக்குது; நேரா ஒரு ஓட்டு வீட்டு மாட்டுக் கொட்டிலுக்குப் போகுது; அங்க ஒரு நோஞ்சான் பசு மாட்டுக்கு முன்னாடி போய் நிக்குது. அது இதப் பாக்க... இது அதப் பாக்க..."

"என்னப்பா விவிலியக் காட்சி மாதிரி இருக்குது? வி.ஹெச்.பி. காரங்க தடை உத்தரவு வாங்கிட்டாங்கன்னா?"

"ஷ்... இது ஹாலிவுட்டுக்கு; அங்கெல்லாம் ரொம்ப ஹெல்ப் பண்ணற ஆளுங்கதான்! ரெண்டும் வாஞ்சையாப் பாக்கையில 'ஐஸ், ஐஸ் பேபி'ன்னு, ரிக்கி மார்ட்டினை விட்டு ஒரு பாட்டுப் போட்டுடலாம்". காசி தொடர்ந்தான்..."ஜனங்கள்ளாம் குண்டாந்தடியும் கம்புமா ஓடி வந்தா... அங்கப் புலியக் காணலை! மாடு மட்டும் மௌனமாக் கண்ணீர் வடிச்சுட்டு நிக்குது. அதோட கண்ணை உத்துப் பாத்து ஒருத்தன் கோயில் தெரியுதுன்னான்; ஒருத்தன் கிருஷ்ண பரமாத்மா தெரியறாருன்னான்... ஆரத்தி எடுத்து, கோமாதா குலமாதா ஸ்டைல்ல ஒரு கலர்ஃபுல் க்ரூப் டான்ஸ்."

"பஞ்சப் பரதேசிங்க நடுப்பற கலர்ஃபுல் டான்ஸா?"

"அது ஃப்ளாஷ்பேக்... மாட்டுக் கண்ணு வழியா, அந்தக் கிராமத்து முந்தைய சரித்திரத்தைக் காட்டணும். ஒரு காலத்துல, செழிப்பா இருந்த கிராமம் அது. பார்வதிங்கற பொண்ணு விக்னேஷ்ங்கற பையனைக் காதலிச்சிடுது. ஆஷாஜி, தலேர் மெஹந்தியைவிட்டு ரெண்டு ஜிங்சாங் லவ் சாங்க்ஸ் ரெகார்ட் பண்ணிடலாம்; ரெண்டு பக்கமும் ஒரே எதிர்ப்பு... சாதிக் கலவரம்... வெட்டுக் குத்து... ரத்த ஆறு... அந்தப் பொண்ணு ஒரு கிணத்துல குதிச்சு தற்கொலைப் பண்ணிக்குது. பையன் தலையைச் சீவி ஆத்துல எறிஞ்சுடறாங்க. அன்னையிலயிருந்து அந்த ஊர்ல தண்ணிப் பஞ்சம்... வறட்சி... "நான் எத்தனை ஜன்மம் எடுத்தாலும் நீதான்

எனக்கு மனைவி''ன்னு ஹீரோ டயலாக் உட்டுட்டுப் போறானா?''

''ஓ... இந்த ஜன்மத்துல புலியா வரானாக்கும்?''

''ரைட்-- ஆனா இந்த சஸ்பென்ஸை கடைசியில உடைக்கணும். புலி கிராமத்துக்குள் ளாற வரச்சல்லாம் ஜனங்க அரிவாளைத் தூக்குவாங்க; ஆனா அது ஒத்தைக் காலைத் தூக்கும்... உடனே இடி, மின்னல், மழை... ஆறு குளமெல்லாம் நிறையும்; அணைக் கட்டு கட்டி, விவசாயம் பண்ணி, ஏற்றுமதி பண்ற அளவுக்குச் செழிப்பு வரும். ஜனங் கள்ளாம் இது புலி போட்ட பிச்சைன்னு உணர்ந்து, அதையும் பசு மாட்டையும் சேர்த்து வைப்பாங்க; ரெண்டுக்கும் பட்டு கட்டி, முடிச்சுப் போட்டு, அக்னியை ஏழு சுத்து சுத்த வைச்சு, கல்யாணக் காட்சியைத் தூள் கிளப்பிடலாம். மாதுரி தீக்ஷித் இப்ப அமெரிக்காவுலதான இருக்காங்க? அவங்க ளையும் ஐஸையும் விட்டு படேல்களை வைச்சு பிரம்மாண்ட டாண்டியா ஸீன் போட்டுடலாம்...''

அங்கே பல தலைகள் டாண்டியா ஆடிக் கொண்டிருந்தன.

''கடைசில புலிக்கும் பசு மாட்டுக்கும் க்ராஸ் ப்ரீடா ஒரு 'புலிமா' பிறக்கும். அதை மடோனா மடியில வச்சுக்கிட்டு 'ஓம் சக்தி ஓம் சாந்தி'ன்னு பாட்டுப் பாடி ஆட்டம் ஆடுவாங்க. புலியும் பசுவுமா பிறந்த தாலதான் இந்த ஜன்மத்துலயாவது விக் னேஷூம் பாருவும் இணைய முடிஞ்சுது; மனுசங்களாப் பொறந்திருந்தா மடிஞ்சு மண்ணாயிருக்க வேண்டியதுதான். அந்தப் பூமியில, ஜாதி பேர்ல சண்டையும் சச் சரவும் இன்னும் நடக்குதுன்னு பன்ச்சா ஒரு மெஸேஜ் சொல்லி, அதோட முடிச் சம்னா, படம் கோல்டன் லயன், சில்வர் புல், டயமண்ட் சிட்டா எல்லாத்தையும் அள்ளிக்கிட்டு வந்துடும்... ஒரு பய கேஸ் போட முடியாது; ஏன்னா இது டைம்ஸ் ஆஃப் இந்தியாவுல வந்த உண்மைச் செய்தி; முன் ஜன்மக் காதல் மட்டுமே கற்பனை. இதோ கட்டிங்... பார்த்துக்குங்க!''

ஒன்பதாம் நம்பர் டேபிள்காரர் எழுந்து வந்தார். ''ஹலோ ஐம் சரோஜ்'' டே கோமனன் ஃப்ரம் யு.எஸ்ஏ...''

''ஒரிஜினலி ஃபிரம் கேரளா... ஆவியுலக திரைப்பட ஸ்பெஷலிஸ்ட்...''

''வாங்க... வாங்க'' உற்சாகமாக வரவேற் றார் காசி. ○

# தாஜ்மஹாலுக்கு குட்பை!

சென்னை தீவுத் திடலில் தற்காலிகமாய் எழுப்பப்பட்ட தாஜ் மஹால், சென்னை வெயிலுக்கு குட்பை சொல்லிவிட்டுப் புறப்பட்டு விட்டது. அடுத்த முகாம் சார்மினார் நகரில். அப்புறம் மும்பை! ஒரிஜினல் தாஜ்மகாலின் அளவுகளை அப்படியே பாதியாக்கி, இங்கே உருவாக்க ஒன்றரைக் கோடி ரூபாய் செலவாயிற்று. இந்த தாஜ்மகாலைக் கண்டுகளித்த சென்னைவாசிகளின்



எண்ணிக்கை சுமார் ஆறு லட்சம்.

இதற்கு முன் பெங்களூரில் இந்த தாஜ்மகாலை உருவாக்கியபோது, நாலு சண்டைப் படங்களுக்கான காட்சிகள், பாட்டுகளை, பார்வையாளர்களுக்குத் தொந்தரவு இல்லாமல், இரவு நேரங்களில் படம் பிடித்தார்களாம். இங்கேயும் தமிழ்ப்பட ஷூட்டிங்கிற்குக் கேட்பார்கள் என்று எதிர்பார்த்து ஏமாந்ததுதான் மிச்சம்.

அடுத்த பிப்ரவரியில், துபாயில் நடைபெறவிருக்கும் ஷாப்பிங் திருவிழாவின்போது ஷார்ஜாவுக்குப் போகிறதாம் இந்த தாஜ்மஹால்!

- பாரதி

இறைவனுடைய திருக்கோயில் சாதுக்களினுடைய உள்ளக் கோயில்களாகும் !

## முக்தி தரும் ஸ்ரீ அன்னபூரணி க்ஷேத்ரமான

# காசியில் ஆடி அமாவாசை நாளில்

## சாதுக்களுக்கு (சாது பண்டாரா) அன்னதானம் செய்வோம் வாருங்கள் !

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் புண்ணிய க்ஷேத்ரமான காசியில் ஆடி அமாவாசை நாளில் சாதுக்களுக்கு அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்கேற்கலாம்...

"ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" நடத்தும் **5** ஆண்டுகளுக்கு மேலாக தொடர்ந்து அன்னதான சேவை !

பேரன்புடையீர் ! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ அன்னபூரணி அன்னை தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம். கங்கை ஆறு உத்தரவாஹினியாக ஓடுகின்ற காசியில் நடமாடும் தெய்வங்களாக இருக்கின்ற சாதுக்களுக்கு அன்னதானம் செய்தால் அது இறைவனுக்கே போய் சேருகிறது. காசியில் சுமார் 200க்கு மேற்பட்ட ஆசிரமங்கள் உள்ளன. இங்கு சந்நியாசிகள் தூரதேசத்தில் இருந்து கொண்டு பூஜை தவம், ஜபம், மந்திர உபதேசம் முதலிய நற்காரியங்களை செய்து காசியில் தொண்டாற்றி வருகிறார்கள். இத்தகைய சிறப்பு வாய்ந்த சந்நியாசிகளை காசியிலுள்ள அனைத்து ஆசிரமங்களிலிருந்து அழைத்துவிருந்தோம்பல் செய்து பரிவட்டம், ருத்ராட்ச மாலை இவைகளை அணிவித்து அவர்கள் நெற்றியில் சந்தனம் வைத்து புஷ்பம் சாற்றி வடநாட்டு முறைப்படி பல வகையான இனிப்பு வகைகள், பூரி, சப்ஜி, பாயசம் முதலியவைகளை மண் சட்டியில் வைத்து அவர்களுக்கு தீபாராதனை செய்து வணங்கி அவர்களை சாப்பிட வைத்து பாத காணிக்கை (தட்சணை) வைத்து அவர்கள் திருப்தியாகும் வரை கேட்கின்ற பதார்த்தங்களை "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" மூலம் காசி ஸ்ரீ குமாரசாமி மடத்தில் சாதுக்களுக்கும் படைக்க இருக்கிறோம். இதில் எல்லா சாதுக்களும் ஒன்றாக அமர்ந்து பரிமாறுகின்ற அன்னதானத்திற்கு நிகராக வேறொன்றுமில்லை. இந்த சாது பண்டாரா இறை பணிக்கு தங்களால் இயன்ற நன்கொடை வழங்கி சாதுக்களின் ஆசியையும், எண்ணற்ற செல்வங்களையும் பெற்று, இறைவனருளைப் பெற்று வாழ்வுபெற அன்புடன் அழைக்கிறோம்.

தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

- ரூ.500- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.

காசி, கயா, பிரயாகை (திரிவேணி சங்கமம்) ஆகிய இம்மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் புண்ணிய காரியங்கள், பித்ரு காரியங்கள், பிண்டம் போடுதல், தாமங்கள், ச்ராத்தம், திவசம், தர்ப்பணம் போன்றவற்றை அவரவர் விருப்பப்படி அன்னதானக் கைங்கர்ய அன்பர்களுக்கு செய்து தரப்படும்.

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு பிண்டப்பிரதானம் மற்றும் தர்ப்பணம் காசியிலும், கயாவிலும், பிரயாகையிலும் நேரில் சென்று செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" மூலம் செய்யப்படுகிறது.

பித்ருக்களுக்கு பிண்டப்பிரதானம் செய்ய காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று பித்ரு க்ஷேத்ரங்களுக்கும் தனித்தனியாக ரூபாய் 1000-அனுப்பினால் போதும். யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம். பிண்ட பிரதானத்திற்காக ரூ. 5000- அனுப்பும் அன்பர்கள் சார்பாக தொடர்ந்து வருடத்திற்கு ஒருமுறை ஆறு ஆண்டுகளுக்கு மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் எந்த இடத்தில் யாருக்கு ச்ராத்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவர்களுக்கு ச்ராத்தம் செய்யப்படும். பித்ரு காரியங்களுக்கு பணம் அனுப்பும் அன்பர்களுக்கு காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள தெய்வீக ஆலமரமான 'அக்ஷய வடத்தின்' படமும், கயாவில் உள்ள விஷ்ணு பாதத்தின் படமும் அனுப்பி வைக்கப்படும். நம் வீட்டில் செய்யும் ச்ராத்தத்திற்கு தாய், தந்தையர், உறவினர்கள் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. மூன்று பித்ரு க்ஷேத்ரங்களில் ஏதாவது ஒரு அக்ஷய வடத்தில் (ஆலமரம்) பிண்டப்பிரதானம் செய்தால் ஏழு தலைமுறைக்கு பித்ருக்கள் கூட்டமே முக்தி அடைவதுடன் பித்ரு தோஷங்களும் நிவர்த்தியாகும்.

அன்னதானத்திற்கு நன்கொடை அனுப்புவோர் தங்களுடைய வேண்டுதலையும், பிரார்த்தனையும் தெரிவித்தால் அதற்கேற்ப நீங்கள் விரும்பும் அமாவாசை தினத்தில் காசியில் அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கங்கா தீர்த்தத்துடன் கூடிய காசி சொம்பு, காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும் ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் வண்ணப்படமும், சிறப்பு அம்சம் [illegible] புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

ரூ.5000 - அனுப்பும் அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் அமாவாசை தினத்தில் காசியில் அன்னதானமும், கங்கையில் தீபமேற்றும் பணியும் செய்து ஆறு வருடங்கள் ஆன்மீகம் மாத இதழ் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் மங்கலம் பெற வேண்டும் என்ற எண்ணத்துடன் ரூ. 5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத்கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

அன்னதான சேவையிலும், கங்கைக்கு தீபமேற்றும் பணியிலும் ஈடுபட விரும்பும் அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque / D. D/ M. O. மூலம் Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai - 4 என்ற பெயருக்கு எடுத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பிவைக்கவும். கலியுகத்தில் அன்னதான சமுதாயப்பணி மகத்தான தெய்வீகப்பணியாக காசி திருத்தலத்தில் தழைத்திட உதவுமாறு அன்புகூர்ந்து வேண்டுகிறோம்.

நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.

Cheque / D. D/ M. O. அனுப்ப வேண்டிய முகவரி


## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street,(Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

TEL : 2495 9302, E-mail:siva siva @ vsnl.net


"காசியில் சாதுக்களுக்கு(சாது பண்டாரா) அன்னதானமிடுவது வாழ்வில் பெரும் புண்ணியத்தைக் கொடுக்கும்"




## யுத்த பேரிகை

"தேவி! இந்தப் புராதன பல்லவ சிம்மாசனம் உன்னைப் போன்ற உத்தமியைத் தனக்கு உரியவளாகப் பெறுவதற்கு எத்தனையோ காலம் தவம் செய் திருக்க வேண்டும்! உன்னைப் பட்டமகிஷியாகப் பெறுவதற்கு நான் எவ்வளவோ ஜன்மங்களில் பாக்கியம் செய்திருக்க வேண்டும்!" என்று மாமல்ல சக்கரவர்த்தி கூறியபோது, அவரது வயிரம் பாய்ந்த கம்பீரக் குரலும் தழுதழுத்தது. வானமா தேவிக்கோ புளகாங்கிதம் உண்டாயிற்று. ஏதேதோ சொல்ல வேண்டுமென்று தேவி பிரயத்தனப்பட்டாள். ஆனால், வார்த்தைகள் வெளிவரவில்லை. பல்லவேந்திரர் மேலும் கூறினார்:

"பாண்டியர் குலவிளக்கே! கேள்! நீ என்னுடைய பட்டமகிஷி மட்டுமல்ல. எனக்குப் பிறகு இச் சிம்மாசனத்திற்குரிய மகேந்திர குமாரனுடைய அன்னை. பல்லவ சாம்ராஜ்யத்துப் பிரஜைகளையெல்லாம் ஒரு நாளிலே ஒரு நொடியிலே வசீகரித்து, அவர்களுடைய பக்தியைக் கொள்ளை கொண்ட சக்கரவர்த்தினி. என் தந்தை மகேந்திரர் காலமான சில நாளைக்குப் பிறகு, மந்திரி மண்டலத்தார் எனக்குப் பட்டாபிஷேகம் செய்து, பல்லவ சிம்மாசனத்தில் அமர்த்தினார்கள். அதே சிம்மாசனத்தில் என் அருகில் நீயும் வீற்றிருந்தாய். நம்மிருவருக்கும் ஆசி கூறிய எங்கள் குலகுரு ருத்ராச்சாரியார் நாம் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் காட்சியானது, சொர்க்கலோகத்துத்

அமரர் கல்கி

தேவ சபையில் தேவேந்திரனும் இந்திராணியும் கொலு வீற்றிருப்பதைப் போல் இருக்கிறது என்று ஆசி கூறினார். அதைக் கேட்ட சபையோர் குதூகலத்துடன் ஆரவாரித்து மகிழ்ந்தார்கள். கொஞ்ச காலம் நாட்டில் மழை பெய்யாமலிருந்ததையும், நீ காஞ்சி நகர் புகுந்ததும் பெருமழை பெய்ததையும் நினைவுகூர்ந்த சபையோர், நீ சாக்ஷாத் இந்திராணியேதான், சந்தேகமில்லை என்று ஒருமுகமாகக் கூறினார்கள். செந்தமிழ்ப் புலவர்கள் உனக்கு வானமாதேவி என்று பெயர் சூட்டி வாழ்த்துப் பாடல்கள் புனைந்தார்கள். அது முதல் அரண்மனையிலும் நாடு நகரங்களிலும் உன்னை இந்திராணி என்றும், வானமாதேவி என்றும் என் பிரஜைகள் பெருமையோடு சொல்லி வருகிறார்கள். அப்பேர்ப்பட்ட உன்னை இந்தப் பல்லவ சிம்மாசனத்திலிருந்து இறக்கி விடுவதற்கு இந்த உலகிலே வேறு யாருக்கும் உரிமை கிடையாது..."

வானமாதேவி அப்போது குறுக்கிட்டு ஒரு கேள்வி கேட்டாள். "சுவாமி! இந்தப் பல்லவ சிம்மாசனத்துக்கு மட்டுந்தானே நான் உரிமையுடையவள்? தங்களுடைய இதய சிம்மாசனத்தில் எனக்கு இடம் கிடையாதல்லவா?"

சற்றும் எதிர்பாராத மேற்படி கேள்வி மாமல்லரை ஒருகணம் திகைப்படையச் செய்துவிட்டது. சற்று நிதானித்த பிறகு, வானமாதேவியை அன்புடன் நோக்கிச் சொன்னார்:

"ஆகா! இத்தகைய சந்தேகம் உன் மனத்திலே ஏற்பட்டிருந்தும் சென்ற ஒன்பது வருஷ காலமாக என்னை ஒன்றும் கேளாமலே இருந்து வந்திருக்கிறாயல்லவா? தமிழ் மறை தந்த திருவள்ளுவ முனிவர்,

"தெய்வந் தொழாஅள் கொழுநற்
றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"

என்று கூறியருளினார். அவருடைய பொய்யா மொழிக்கு நீயே உதாரணமாவாய். சாதாரணப் பெண் ஒருத்திக்கு அத்தகைய சந்தேகம் தோன்றியிருந்தால் தினம் நூறு தடவை அதைப் பற்றிக் கேட்டுக் கணவனை நரக வேதனைக்கு உள்ளாக்கியிருப்பாள்!"

"பிரபு! அப்படியானால் இந்த அரண்மனையிலே நான் கேள்விப்பட்டதிலும்,



நாட்டிலும் நகரத்திலும் ஜனங்கள் பேசிக் கொள்வதிலும் உண்மை கிடையாதா? அதை எண்ணிக் கொண்டு நான் எத்தனையோ இரவுகள் உறக்கமின்றிக் கழித்ததெல்லாம் வீண் மடமைதானா?" என்று வானமாதேவி சிறிது உற்சாகத்துடன் கேட்டாள்.

"தேவி! உண்மையில்லாமல் ஒரு வதந்தி பிறக்காது. நீ கேள்விப்பட்டது முழுவதும் பொய்யல்ல. ஆனால் அது என் பூர்வ ஜன்மத்தைச் சேர்ந்த விஷயம்" என்று கூறி



விட்டு மாமல்லர் சற்று நேரம் அக நோக்குடன் இருந்தார். பின்னர் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு விட்டு அவர் கூறியதாவது:

"ஆம்! அது என் பூர்வ ஜன்மத்தின் நிகழ்ச்சி. தேய்ந்து மறைந்து போன பழைய கனவு. என்னுடைய இளம்பிராயத்தில், மகேந்திர பல்லவரின் ஏக புதல்வனாய் கவலையும் துயரமும் இன்னதென்று அறியாதவனாய் நான் வளர்ந்த காலத்தில், வானமும் பூமியும் ஒரே இன்பமயமாய் எனக்குத் தோன்றிய நாட்களில், ஒரு சிற்பியின் மகள் என் இதயத்தில் இடம் பெற்றிருந்தாள். அவளுக்காக என் உடல் பொருள் ஆவியையும் இந்தப் பல்லவ குலத்தின் பெருமையையும் தத்தம் செய்ய நான் சித்தமாயிருந்தேன். ஆனால், என்றைய தினம் அவளுடைய உள்ளத்திலே அன்பைக் காட்டிலும் ஆங்காரம் மேலிட்டு என்னுடைய இதமான வார்த்தையை உதாசீனம் செய்தாளோ, நூறு காத தூரம்

நான் அவளைத் தேடிச் சென்று என்னுடன் வரும்படி அழைத்தபோது, வெறும் பிடிவாதம் காரணமாக என்னுடன் வருவதற்கு மறுத்தாளோ, அன்றே என்னுடைய இதயத்திலிருந்து அவள் விலகிச் சென்றாள். இன்னமும் அவளை நான் மறந்து விடவில்லை; மறக்க முடியவும் இல்லை. இதற்குக் காரணம் அவளுக்கு நான் அன்று கொடுத்த வாக்குறுதியை இன்னும் நிறைவேற்றாமலிருப்பதுதான். தூர தேசத்தில் பகைவர்களுடைய கோட்டைக்குள்ளே வசிக்கும் சிவகாமியின் ஆவியானது என்னை இடைவிடாமல் சுற்றிச் சுற்றி வந்து, பகலில் அமைதியில்லாமலும், இரவில் தூக்கமில்லாமலும் செய்து வருகிறது. என்றைய தினம் அவளுக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுகிறேனோ, வாதாபியை வென்று, அவளை விடுதலை செய்து, அவள் தந்தையிடம் ஒப்புவிக்கிறேனோ அன்று அந்தப் பாதகியின் ஆவி என்னைச் சுற்றுவதும் நின்று போய்விடும். அன்றைக்கே அவளுடைய நினைவை என் உள்ளத்திலிருந்து வேரோடு பிடுங்கி எறிந்து விடுவேன். பின்னர் என் மனத்திலே உன்னையும் நமது அருமைக் குழந்தைகளையும் இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தின் மகோந்நதத்தையும் தவிர, வேறெதுவும் இடம் பெறாது. தேவி! நான் சொல்வதில் உனக்கு நம்பிக்கை ஏற்படுகிறதா? அல்லது இதெல்லாம் உலகில் காமாதுரர்களான புருஷர்கள் சாதாரணமாய்ச் சொல்லும் பசப்பு வார்த்தைகள் என்றே நினைக்கிறாயா?" என்று மாமல்லர் கேட்டார்.

வானமாதேவி அந்தக்கணமே தந்தக் கட்டிலிலிருந்து கீழிறங்கி மாமல்லரின் பாதங்களைத் தொட்டு, "பிரபு! தங்களுடைய வார்த்தை எதிலும் நான் அவநம்பிக்கை கொள்ளேன். தங்களுடைய வாக்குகளுக்கு விரோதமாக என் கண்ணெதிரிலே தாங்கள் நடந்து கொள்வதாகத் தோன்றுமானால், என் கண்களின் பேரிலேதான் அவநம்பிக்கை கொள்வேன்; தங்களைச் சந்தேகிக்க மாட்டேன்!" என்றாள்.

சந்தேகமும் ஆங்காரமும் நிறைந்த சிவகாமியின் காதலுக்கும் இந்தத் தென் பாண்டிய நாட்டு மங்கையர் திலகத்தின் சாத்வீகப் பிரேமைக்கும் உள்ள வேற்றுமையைக் குறித்து மாமல்லரின் உள்ளம் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது. சட்டென்று சுயநினைவு பெற்று வானமாதேவியை இரு கரங்களாலும் தூக்கிக் கட்டிலில் தம் அருகில் உட்கார வைத்துக் கூறினார்:

"இந்த விஷயத்தைப் பற்றி இப்போது கேட்டதே நல்லதாய்ப் போயிற்று. என் தலையிலிருந்து ஒரு பெரிய பாரத்தை நீக்கி விட்டாய். அதற்கு ஈடாக உன்னிடம் இந்தப் பெரிய ராஜ்யத்தின் பாரத்தை நான் ஒப்புவித்து விட்டுப் போகப் போகிறேன். நான் இல்லாத காலத்தில் மந்திரி மண்டலத்தார் இராஜ்ய விவகாரங்களைக் கவனித்துக் கொள்வார்கள் என்றாலும், முக்கியமான காரியங்களில் உன்னுடைய அபிப்பிராயத்தைக் கேட்டே செய்வார்கள். ஆனால், தேவி! ஒரு முக்கியமான காரியத்தை மட்டும் உன்னுடைய தனிப் பொறுப்பாக ஒப்புவிக்கப் போகிறேன். அதை அவசியம் நிறைவேற்றித் தருவதாக நீ எனக்கு வாக்களிக்க வேண்டும்" என்று சக்கரவர்த்தி கேட்டதும் வானமாதேவியின் முகத்தில் பெருமிதக் கிளர்ச்சி காணப்பட்டது.

"பிரபு! இந்த அபலைப் பெண்ணினால் ஆகக்கூடிய காரியம் ஏதேனும் இருந்தால் கட்டளையிடுங்கள். அதை என்னுடைய பரமபாக்கியமாகக் கருதி நிறைவேற்றி வைக்கிறேன்!" என்றாள்.

"காரியம் இருக்கிறது. அது மிகவும் முக்கியமான காரியம். உன் சகோதரன் மகன் நெடுமாறன் ஒரு பெரிய சைனியத்துடன் வாதாபிப் படையெடுப்பில் என்னோடு சேர்ந்து கொள்வதற்காகப் புறப்பட்டான். இன்னும் வந்து சேரவில்லை. வராக நதிக் கரையில் தேக அசௌக்கியங் காரணமாகத் தங்கியிருப்பதாகவும் ஒரு வாரத்தில் காஞ்சிக்கு வந்து சேருவதாகவும் அதுவரையில் நான் அவனுக்காகக் காத்திருக்க வேண்டுமென்றும் சொல்லி அனுப்பியிருக்கிறான். அப்படி நான் தாமதிப்பது அசாத்யமான காரியம். நமது குலகுரு பார்த்துச் சொன்ன நாளில் நான் கிளம்பியே தீர வேண்டும். தேவி! வழியில் நெடுமாறன் சமணர்களின் மாய வலையிலே விழுந்திருப்பதாக எனக்குச் செய்தி எட்டியிருக்கிறது. சமணர்கள்


என் மீது எப்படியாவது பழி தீர்க்க வஞ்சம் கொண்டிருப்பதை நீ அறிவாய். இந்த நிலையில் நெடுமாறனால் இவ்விடம்

இங்கு எதுவும் நேராமல் நீதான் பார்த்துக் கொள்ள வேண்டும்."



ப்படி மாமல்லர் கூறி வாய் மூடுவதற்குள் வானமாதேவி, "பிரபு! இந்த விஷயத்தில் தாங்கள் கொஞ்சமும் கவலை யின்றி நிம்மதியாகச் செல்லுங்கள். என் பிறந்தகத்தைத் சேர்ந்தவர்களால் தங்களுக்கு

எவ்விதக் கெடுதலும் நேர்வதற்கு நான் விட மாட்டேன். நெடுமாறனுக்கு அத்தகைய தீய எண்ணம் ஏதேனும் இருப்பதாகத் தெரிந்தால் இந்தக் கையிலே கத்தி எடுத்து அவனுடைய நெஞ்சிலே பாய்ச்சிக் கொன்று விடுவேன்!" என்று கம்பீரமாய் மொழிந்தாள்.

மாமல்லர் இலேசாகப் புன்னகை புரிந்து விட்டுக் கூறினார்: "வேண்டாம், வேண்டாம்! உன்னுடைய மல்லிகை இதழ் போல் மிருதுவான தளிர்க் கரங்கள் கத்தியைப் பிடித்தால் நோகுமல்லவா? நீ கத்தி எடுக்க வேண்டாம். அப்படி ஒருவேளை அவசியம் நேர்ந்தால் நமசிவாய வைத்தியரைக் கேட்டு நல்ல விஷமாக வாங்கி வைத்துக் கொண்டு, அதைப் பாலிலே கலந்து கொடுத்து விடு...! ஆனால் அந்த மாதிரி அவசியம் ஒன்றும் அநேகமாக நேராது. என்னுடைய சந்தேகம் கொஞ்சமும் ஆதாரமற்றதாயிருக்கலாம் என்றாலும் இராஜ்யப் பொறுப்பு வகிப்பவர்கள் இப்படியெல்லாம் சந்தேகப்பட்டு முன் ஜாக்கிரதை செய்தல் அவசியமாயிருக்கிறது! அதிலும் யுத்தத்துக்காக தூர தேசத்துக்குக் கிளம்பும்போது சர்வ ஜாக்கிரதையாயிருக்க வேண்டுமல்லவா?"

இப்படி மாமல்லர் கூறி முடிந்தாரோ இல்லையோ, அரண்மனையின் கனமான நெடுஞ்சுவர்களையெல்லாம் அதிரச் செய்து கொண்டு ஒரு பெரு முழக்கம் கேட்டது. கேட்கும்போதே ரோமச் சிலிர்ப்பு உண்டாகும்படியான அந்தச் சப்தம் வெளியிலே எங்கேயோ தொலை தூரத்திலிருந்து வருகிறதா அல்லது தரைக்கு அடியிலே பாதாளத்திலேயுள்ள பூகர்ப்பத்திலேயிருந்து வருகிறதா என்று தெரியாதபடி அந்தப் படுக்கை அறைக்குள்ளே எப்படியோ புகுந்து வந்து சூழ்ந்தது. அந்தச் சப்தம் காதினால் கேட்கக் கூடிய சப்தம் மட்டும் அல்ல! உடம்பினாலே ஸ்பரிசித்து உணரக்கூடிய சப்தமாயிருந்தது.

"ஆகா! நடுராத்திரி ஆகிவிட்டது! யுத்த பேரிகை முழங்குகிறது!" என்று மாமல்லர் துள்ளி எழுந்தார்.

அவ்வாறு மாமல்லரைத் துள்ளி எழச் செய்த யுத்த பேரிகையின் முழக்கம், அவருடைய மனக் கண்ணின் முன்னால் அதி பயங்கரமான போர்க்களங்களின் காட்சியைக் கொண்டு வந்து காட்டியது. பெரிய கருங்குன்றுகள் இடம் விட்டு நகர்ந்து ஒன்றையொன்று தாக்குவது போல், ஆயிரக் கணக்கான போர் யானைகள் கோரமாகப் பிளிறிக் கொண்டு ஒன்றையொன்று மோதித் தாக்கின. நூறு நூறு ரதங்கள் பூமி அதிரும்படி விரைந்து சென்று, ஒன்றின் மீது ஒன்று இடித்துத் தூள் தூளாகி விழுந்தன. பதினாயிரக்கணக்கான குதிரைகள் வாயு வேகமாகப் பாய்ந்து சென்று போர்க்களத்தின் மத்தியில் சந்திக்க, அவற்றின் மீதிருந்த போர் வீரர்கள், கையிலிருந்த ஈட்டிகளைக் கொண்டு, ஒருவரையொருவர் தாக்கிய போது, ஈட்டிகள் மின்னலைப் போல் ஒளி வீசிக் கண்களைப் பறித்தன. லட்சக்கணக்கான போர் வீரர்கள் கூரிய வாள்களைக் கொண்டு ஒருவரையொருவர் வெட்டித் தள்ளினார்கள். பார்க்கப் பயங்கரமான இரத்த வெள்ளம் ஒரு பெரிய மாநதியின் பிரவாகத்தைப் போல் ஓடிற்று. அந்த பிரவாகத்தில் உயிரிழந்த கரிகளும், பரிகளும், காலும் கையும் தலையும் வெட்டுண்ட மனிதர்களின் உடல்களும் மிதந்து சென்றன.

இந்தப் பயங்கரமான கோரக் காட்சியுடன் கலந்து கலந்து, ஒரு பெண்ணின் ஆங்காரம் நிறைந்த முகத்தோற்றமும் மாமல்லரின் அகக் காட்சியில் தென்பட்டது! அது சிற்பி மகள் சிவகாமியின் முகந்தான் என்று சொல்ல வேண்டியதில்லையல்லவா?

## பத்தாம் அத்தியாயம்

# மங்கையர்க்கரசி



அர்த்த ராத்திரியில் அந்தப்புரத்துக்குள்ளே புகுந்து மாமல்லரின் காதிலே ஒலித்த யுத்த பேரிகையின் முழக்கமானது, அந்தக் காஞ்சி நகரில் வாழ்ந்த லட்சக் கணக்கான மக்கள் காதிலும் ஒலித்தது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவித உணர்ச்சியை அந்த முழக்கம் உண்டாக்கிற்று.

அந்த நடுநிசி வேளையில், காஞ்சி அரண்மனையைச் சேர்ந்த நந்தவனத்தில், பிராயம் முதிர்ந்த ஒரு மனிதரும் கட்டழகியான ஓர் இளம் பெண்ணும் தனிமையாக உலவிக்

கொண்டிருந்தார்கள். வானத்திலே பிர காசித்துக் கொண்டிருந்த சந்திரனோடு போட்டியிட்டுக் கொண்டு, அந்தப் பெண் ணின் வதன சந்திரன் பிரகாசித்துக் கொண் டிருந்தது. யுத்த பேரிகையின் முழக்கத்தைத் திடீரென்று கேட்டதும் பெருங்காற்றில் பூங் கொடி நடுங்குவதைப் போல், அந்த யுவதி யின் உடம்பும் நடுங்கிற்று. பீதி நிறைந்த குரலில், "அப்பா! இது என்ன ஓசை?" என்று கேட்டுக் கொண்டே அந்தப் பேதைப் பெண் தன் தந்தையைக் கட்டிக் கொண் டாள்.

"குழந்தாய்! யுத்த பேரிகை முழங்குகிறது! நான் உன்னிடம் விடைபெற வேண்டிய சமயம் நெருங்கிவிட்டது!" என்று அந்தப் பெரியவர் கூறினார்.

நிலா வெளிச்சத்தில் சற்று உற்றுப் பார்த் தோமானால் அந்த இருவரையும் நாம் ஏற் கெனவே பார்த்திருக்கிறோம் என்பது நினைவு வரும். ஆம்! அன்று பகலில் ஏகாம் பரேசுவரர் சந்நிதியில் புருஷர்களின் கோஷ் டியிலே அந்தப் பெரியவரும், பெண்களின் வரிசையிலே அந்த இளநங்கையும் நின்று கொண்டிருக்கவில்லையா? அந்தப் பெண் ணின் முகத்திலே அப்போது ததும்பிய பரவசமான பக்தி பாவத்தைக் கண்டு நாம் வியக்கவில்லையா?

அவ்விருவரும் கொடும்பாளூர்ச் சோழ வம்சத்தைச் சேர்ந்த செம்பியன் வளவனும், அவனுடைய செல்வத் திருமகளுமேயாவர்.

கரிகால் வளவன் காலத்திலிருந்து சில நூற்றாண்டுகள் மிகப் பிரபல மாக விளங்கியிருந்த சோழ ராஜ்ய மானது, நாளடைவில் சீரும் சிறப்பும் குன் றித் தெற்கே பாண்டியர்களும், வடக்கே பல்லவர்களாலும் நெருக்கப்பட்டு, மிக்க க்ஷீண நிலையை அடைந்ததோடு, சோழ வம்சமும் இரண்டு மூன்று கிளைகளாகப் பிரிந்து போயிருந்தது. உறையூரில் நிலை பெற்ற சோழ வம்சத்து மன்னர்கள் ஒரு சிறு ராஜ்யத்துக்கு உரியவர்களாயிருந் தார்கள். கொடும்பாளூர்க் கிளை வம்சத் தின் பிரதிநிதியாக அப்போது விளங்கிய செம்பியன் வளவனுக்குப் புத்திரபாக்கியம் இல்லை. குலத்தை விளங்க வைக்க ஒரு புதல்வி மட்டுமே இருந்தாள். அந்த அரு மைக் குமாரிக்கு 'மங்கையர்க்கரசி' என்ற செல்வப் பெயரைச் செம்பியன் வளவன் சூட்டினான். ஆசை காரணமாகத் தகப்பன் சூட்டிய பெயர் என்றாலும், பெண்ணைப் பார்த்தவர்கள் அனைவரும், 'இத்தகைய பெண்ணுக்கு இந்தப் பெயரே தகும்' என் றார்கள். அப்படித் தேக சௌந்தரியத்திலும் குண சௌந்தரியத்திலும் அவள் சிறந்து விளங்கினாள்.

தன்னுடைய ஆயுள் முடிவதற்குள்ளே தன் மகளைத் தென்னாட்டின் சிறந்த இராஜ வம்சம் ஒன்றில் பிறந்த இராஜகுமாரனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து விட வேண் டும் என்ற ஆசை செம்பியன் மனத்திலே குடி கொண்டு, இரவு பகல் அதே கவலை யாக இருக்கும்படி செய்தது. இந்த நிலை யில், வாதாபி படையெடுப்புச் சைனியத்தில் வந்து சேரும்படி, தென்னாட்டு மன்னர் குலத்தினர் அனைவருக்கும் மாமல்லரி டமிருந்து ஓலை வந்தது போல் அவனுக்கும் வந்து சேர்ந்தது. செம்பியன் தன் வாழ்நாள் மனோரதம் நிறைவேறுவதற்கு இதுவே தரு ணம் என்று எண்ணி உற்சாகமடைந்தான். இந்தத் தள்ளாத பிராயத்தில் அவன் போருக்குக் கிளம்பி வந்ததற்கு முக்கிய கார ணம், காஞ்சி நகரில் அச் சமயம் பல தேசத்து இராஜகுமாரர்கள் கூடியிருப்பார் களென்றும், அவர்களில் யாருக்கேனும் மங்கையர்க்கரசியை மணம் புரிவிப்பது ஒருவேளை சாத்தியமாகலாம் என்றும் அவன் நம்பியதுதான்.

"அப்பா! உண்மையாகவே என்னை இங்கே விட்டு விட்டுப் போகிறீர்களா? இந்தப் பெரிய அரண் மனையில், முன்பின் தெரியாதவர்களுக்கு மத்தியில், நான் எப்படி காலங்கழிப்பேன்? ஒருவேளை யுத்தகளத்திலே தங்களுக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால் என் கதி என்ன ஆவது!" என்று புலம்பினாள் செம்பியன் குமாரி மங்கையர்க்கரசி.

"குழந்தாய்! நமது குல தெய்வமான முரு கப் பெருமான் உன்னைக் காப்பதற்கு இருக் கும்போது நீ ஏன் கவலைப்பட வேண்டும்? எந்தப் பெருமானுடைய வேலாயுதமானது மலையைப் பொடியாக்கியதோ, கடல் நீரை வற்றச் செய்ததோ, சூரனை வதைத்ததோ, பானுகோபனை சம்ஹரித்ததோ, தேவர்

## அருள்வாக்கு

இன்றைய பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்களின் கடமை ஜனங்களுக்குப் பிடித்ததை மட்டுமே சொல்வது என்று வைத்துக் கொள்ளக்கூடாது. அவர்களின் அறிவை, மனத்தை உயர்த்துகிற விஷயங்களையே எழுத வேண்டும் - இதைச் சுவாரசியமாகச் செய்ய வேண்டும். உத்தமமான விஷயங்களை புதுப்புது விதங்களில் உணர்த்த வேண்டும். பத்திரிகையாளர்கள் வாழ்நாள் முழுவதும் மாணாக்கர்களாகவே இருந்தால்தான், தாங்களும் இப்படிப் புதுப்புது விஷயங்களை அறிந்து, மற்றவர்களுக்குப் பிரசாரம் செய்ய முடியும்.



சத்தியத்தைச் சர்க்கரைப் பூச்சிட்ட மாத்திரைகளாக்கித் தர வேண்டும். சர்க்கரைப் பூச்சுத்தானே ஒழிய, முழுக்கவும் சர்க்கரையாகி விடக்கூடாது. வெறும் இந்திரிய ரஞ்சகமான சமாசாரங்களில்தான் ஜனங்களுக்கு அதிகக் கவர்ச்சி இருக்கிறது என்று சொல்லிக் கொண்டு, இவ்விதமே எழுதுவது சரியல்ல. ஜனங்களுக்கு ஆத்மாபிவிருத்தி தருகிற முறையில் எழுதுவதற்கு இருதயபூர்வமாக எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள் முனைந்தால், தானாகவே ஜனங்களுக்கு அதிக ருசி பிறக்கும். 'நம்மையும் உயர்த்திக் கொண்டு, நம் வாசகர்களையும் நாம் உயர்த்த வேண்டும்' என்கிற கடமை உணர்ச்சியைப் பெற வேண்டும். இவ்விதம் ஆத்ம க்ஷேமம், லோக க்ஷேமம், சாந்தி, சுபிட்சம் எல்லாவற்றுக்கும் மெய்யான சேவை செய்கிற பாக்கியத்தைப் பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்கள் பெற வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

களுக்கு அபயப் பிரதானம் அளித்ததோ, அந்தகைய வெற்றிவேல் உனக்கு என்றும் துணையாயிருக்கும். குழந்தாய்! நீ கொஞ்சமும் அதைரியப்படாமல் எனக்கு விடை கொடுக்க வேண்டும்" என்று செம்பியன் கூறியதைக் கேட்ட மங்கையர்க்கரசி, மெய்சிலிர்த்துப் பரவச நிலை அடைந்து நின்றாள்.

அவளுடைய பக்திப் பரவச நிலையைத் தெரிந்து கொள்ளாத தந்தை, "அம்மா! வேலும் மயிலும் உனக்குத் துணையாக இருப்பதோடு, மாமல்ல சக்கரவர்த்தியின் தாயார் - மகேந்திர பல்லவரின் பட்டமகிஷி - புவனமகாதேவியும் உனக்கு ஆதரவாக இருப்பார். உன்னைத் தன் சொந்த மகளைப் போல் பாதுகாத்து வருவதாக எனக்கு வாக்குத் தந்திருக்கிறார். நீ உன் அன்னையை இளம்பிராயத்திலே இழந்து விட்டாய். புவனமகாதேவிக்கோ சொந்தப் புதல்வி கிடையாது. உன்னைத் தன் கண்மணியைப் போல் பாதுகாத்துத் தருவதாக என்னிடம் உறுதி கூறியிருக்கிறார். ஆகையால், என் செல்வ மகளே, நீ சிறிதும் கவலைப்பட வேண்டாம். போர்க்களத்துக்குப் போக எனக்குத் தைரியமாக அனுமதி கொடு!" என்றான்.

இதற்கும் மங்கையர்க்கரசி மறுமொழி கூறாமல் மௌனமாய் நிற்கவே செம்பியன் வளவன் இன்னமும் சொல்வான்:

"மகளே! நீ பால்மணம் மாறாத பச்சைக் குழந்தையாயிருந்தபோது, ஒரு பெரியவர் நமது வீட்டுக்கு வந்தார். அவர் உன்னைப் பார்த்தார். உன் முகத்தை உற்றுப் பார்த்தார். உன் சின்னஞ்சிறு பிஞ்சுக் கைகளைத் தூக்கிப் பார்த்தார். பார்த்துவிட்டு, 'இந்தக் குழந்தையின் கையில் சங்கு சக்கர ரேகை இருக்கிறது; இவள் பெரிய மண்டலாதிபதியின் பட்டமகிஷியாவாள்!' என்று சொன்னார். அந்த வார்த்தைகள் என் காதிலே இனிய தேனைப் போல் பாய்ந்தன. அன்றுமுதல் இராஜகுமாரன் எப்போது வரப் போகிறான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். அவனைத் தேடிக் கொண்டுதான் முக்கியமாக நான் இந்தக் காஞ்சி நகருக்கு வந்தேன்...!"

மங்கையர்க்கரசி அப்போது அளவில்லாத பரபரப்புடன், "அப்பா! அப்பா! நேற்றிரவு நான் ஒரு அதிசயமான கனவு கண்டேன். அதைச் சொல்லட்டுமா?" என்று கேட்டாள்.

(தொடரும்)

மும்பைக்காரர்கள் எரிச்சலில் இருக்கிறார்கள். இருபது ரூபாய்க்கு விற்க வேண்டிய அட்மிஷன் ஃபார்ம்களை ஐம்பது ரூபாய்க்கு விற்று, கல்லூரிகள் அநியாயமாகக் காசு பண்ணுகிறதே என்ற வயிற்றெரிச்சல் அல்ல; சக்தி கொடுக்க வேண்டிய வேர்க்கடலை, ஜோதி என்ற மூன்று வயதுக் குழந்தையின் நுரையீரலில் மாட்டிக் கொண்டு தொல்லை கொடுத்ததே என்ற நெஞ்செரிச்சலும் இல்லை; மழை வந்து 'ஹலோ' சொல்லி விட்ட நிலையில் பிரதான சாலைகள் பலவும் வாய் பிளந்து கிடப்பதைக் கண்ட கண் எரிச்சலும் இல்லை; தலையிலிருந்து கால்வரை பற்றி எரிய வைத்திருப்பது அண்டை மாநிலத்திலிருந்து வந்திருக்கும் செய்திதான்! 'உமா பாரதிக்கு வோட்டுப் போடாதீர்கள். அவர் திருமணமாகாதவர்; அதனால் மழையே வராது; 'பிரதமரும் ஜனாதிபதியும் திருமணமாகாதவர்கள்; அதனால்தான் நாட்டில் சுபிட்சம் தரும் மழையே இல்லை'' என்றெல்லாம் திக் விஜய்சிங் சொல்லி வருகிறாராம்!

இதைக் கேட்டு விட்டு, பேரன், பேத்தி எடுத்துவிட்ட எங்கள் தலைவர்கள் எங்கேயாவது, 'மும்பைக்கு எப்போதும் அதிக மழை தேவைப்படுமே' என்று இரண்டாம் மூன்றாம் தாரங்களைப் பற்றி சிந்திக்க ஆரம்பித்து விட்டால்...? அடுக்குமா?

"அடுக்குமா இந்த அடாவடிச் செயல்? மஹாராஷ்ட்ராவில் வந்து கடை போட்டு விட்டு, மராத்தியருக்கு வேலை கொடுக்க மாட்டேன் என்கிறீர்களே" என்று கொதித்தெழுந்துவிட்டனர் சிவசேனைக்காரர்கள். முதலில் முலுண்டிலுள்ள 'மெக்டொனல்ட்ஸ்', அடுத்து தானாவிலுள்ள 'ஏஷியன் இன்டர்நேஷனல் மார்கெட்டிங்' இரண்டிலும் மராத்தியரின் விண்ணப்பங்களை எடுத்துச் சென்றிருக்கிறது சிவசேனை. முதல் கம்பெனியில், 'அவர்கள் தரையைத் துடைத்துச் சுத்தம் செய்யும் வேலையைச் செய்வார்களா?' என்று கேட்டு அவமானப் படுத்தினார்களாம். இரண்டாவது கம்பெனியில் 'மராத்தியர் சோம்பேறிகள்' அவர்களை வேலைக்கு வைத்துக் கொள்வதாவது?' என்று நேரடியாகவே மறுத்துவிட்டார்களாம். உடனே கல்லெறி, கலாட்டாதான். இரண்டாவது கம்பெனியின் எம்.டி., மானேஜர் முதலானவர்களை அறையில் அடைத்து வைத்து, தோப்புக்கரணமெல்லாம் போட வைத்திருக்கிறார்கள். ஆகஸ்டு முப்பதாம் தேதிக்குள் மராத்தியர்களை வேலைக்குச் சேர்த்துக் கொள்ள



# "நான் திருந்திட்டேன்!"

# -மும்பைமசாலா



• கரீனா

மன உளைச்சலிலிருக்கிறார். மனிதர்களின் அருமையைப் பற்றி அருமையாகச் சொல்லிக் கொடுத்திருக்கிறாராம் சூரஜ்; அவர்தான் கரீனாவுக்கு தற்சமய குரு!

குருவை மிஞ்சிய சிஷ்யர்களைப் பற்றி உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். ஆனால் குருவே அஞ்சிய சிஷ்யரைப் பற்றித் தெரியுமோ? அபு இப்ரஹீம் சையதிற்கு, ஒன்று முதல் ஏழு வரை முனிசிபல் ஸ்கூலில் பாடம் சொல்லிக் கொடுத்தவர் ஷஹீன். அபுவின் ஏழ்மை நிலையைக் கண்டு, அவனுக்கு அவ்வப்போது பண உதவி செய்வதும், வீட்டிற்குப் பொருளுதவி செய்வதுமாயிருந்தார் ஷஹீன். இருபது வயதில் அபு, ஏதோ பிசினஸ் ஆரம்பிக்கிறேன் என்று இருபதாயிரம் கேட்டதும் உடனே கொடுத்து விட்டார். இப்போது திருப்பிக் கேட்டால், ஆள் வைத்து அடிப்பேன் என்று மிரட்டுகிறானாம் அபு. நிறையப் பேரிடம் 'தாதா'கிரி செய்து பணம் வசூலித்திருக்கிறானாம். வழக்கு நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் ஆசிரியையின் மனசு படுத்துவிட்டது.

— ஜெய்ஸ்ரீ ராஜ்

வேண்டும் என்று 'கெடு' வைத்திருக்கிறார்கள்; அவர்கள் 'பிடி' கொடுத்தால் தானே, எடுபடும் இந்தக் 'கெடுபிடி'?

"கெடுபிடி பண்ணிய காலமெல்லாம் போய்விட்டது; இப்போது நான் ரொம்ப மாறி விட்டேன்; அதற்குக் காரணமே இயக்குனர் சூரஜ் பாரஜத்யாதான்' என்று உருகியிருக்கிறார் கரீனா கபூர். "நான் ரொம்பத் திமிர் பிடித்தவள் என்று பெயர் எடுத்தவள்தான். ஆனால் வேண்டாதவர்களை அண்டவிடாமல் தடுப்பதற்கு நான் போட்டுக் கொண்ட கவசமது. 'மை பிரேம் கி திவானி ஹூம்'மில் சூரஜ்ஜுடன் பழகியபோதுதான், வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் என்ற பாகு பாடே இல்லாமல் எல்லோருடனும் இனிமையாக, எளிமையாகப் பழகுவது எப்படி என்பதைப் புரிந்து கொண்டேன்" என்கிறார். அப்பா ரந்திர் கபூரின் 'பைபாஸ்' சர்ஜரியால் வேறு

## மறுக்கிறார் மைதீன்கான்

8.6.03 இதழில் 'வெட்டுக்குத்தில் தமிழகம்' என்ற கட்டுரையில் என் கருத்து பிரசுரமாகியிருக்கிறது. எந்த ஒரு தனி நபர் பற்றியோ, அமைப்புக் குறித்தோ, அதன் செயல்பாடுகள் பற்றியோ எந்தக் கருத்தையும் நான் கூறவில்லை.

டி.பி.எம். மைதீன்கான்,
சட்டமன்ற உறுப்பினர்,
பாளையங்கோட்டை.



ர் அகில இந்தியக் கட்சியின் தமிழகத் தலைமை அலுவலகத்தில் நாம் கண்ட காட்சி இது: முக்கியமான கட்சி நிர்வாகிகள் கூட்டம் நடந்து கொண்டிருந்தது. இப்போதைய அரசியல் நிலைமையை விளக்கிய தலைவர், சிறிது நேரத்தில் உட்கார்ந்தபடியே கண்ணயர்ந்து விட்டார். யாருக்கும் அவரை எழுப்ப மனம் வரவில்லை. பரபரப்பான விவாதங்கள்கூட அவரை விழிக்கச் செய்யவில்லை. அந்தத் தலைவர் இளம் வயதில் பல தீரச் செயல்கள் செய்தவர்; தியாகத் தழும்பில் பூத்தவர். முதுமை தந்த அசதி, அவரை முக்கியமான கூட்டத்தில் கண்ணயரச் செய்துவிட்டது.

எண்பது வயதைத் தொட்ட கலைஞரின் சுறுசுறுப்பு நாடறிந்தது. பேராசிரியரும் எண்பதைத் தொட்டவர்தான்.

தி.மு.க மேடையில் தலைமை நிர்வாகிகள் வரிசையில் இளம் முகங்களான ஸ்டாலினும் பரிதியும் தென்படுகிறார்கள். தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் சோ. பாலகிருஷ்ணன் எழுபது ப்ளஸ். தில்லியில் எடுத்துக் கொண்டால் வாஜ்பாய், அத்வானி, முரளி மனோகர் ஜோஷி, சுர்ஜித் இந்திரஜித் குப்தா, பிரணாப் முகர்ஜி, அர்ஜுன்சிங், என்.டி.திவாரி என்று எழுபது ப்ளஸ் தலைவர்களின் வரிசை நீண்டு கொண்டே போகும்.

அரசியலில் முதியவர்களின் ஆதிக்கம் தானா? இளைஞர்களுக்கு இடம் கிடையாதா? என்ற குரல்கள் எழுகின்றன. 'இன்றைய சூழலில் இளைஞர்கள் எங்கே அரசியலுக்கு வருகிறார்கள்? அப்படி வந்தாலும் அவர்களுக்குச் சேவை மனப்பான்மையும் தியாக உணர்வும் இல்லையே' - மூத்தவர்களிடமிருந்து இப்படிப் பட்ட குற்றச்சாட்டு வருகிறது. "அப்படியே அரசியலில் இளைஞர்கள் வந்தாலும் அவர்கள் நோக்கம் பதவி, பணம் என்று தானே சுற்றி வருகிறது?" என்கிறார்கள் மூத்தவர்கள்.

"**கா**ங்கிரஸைப் பொறுத்தவரை ராஜீவ் காந்தி காலத்திலிருந்து துவங்கிய 'இளமைத் திணிப்பு' இன்றுவரை தொடர்கிறது என்கிறார் தமிழ்நாடு காங்கிரஸின் இணைச் செயலாளரான சிரஞ்சீவி. மிக இளம் வயதிலேயே அகில இந்திய இளைஞர் காங்கிரஸில் பொதுச் செயலாளராகப் பணியாற்றிய அனுபவம் கொண்டவர் இவர். 'அகில இந்திய அளவிலேயே அரசியலில் என்னால் முன்னுக்கு வர முடியாததற்கு முக்கியக் காரணம் இந்தி மொழி தெரியாததுதான்" என்கிறார்.

"இன்றைக்கு அகில இந்திய காங்கிரஸ் செயலாளர்கள் இருபத்து மூன்று பேரில் பதினாறு பேர், ஐம்பது வயதுக்கு உட்பட்டவர்கள்.

# இளைஞர்களுக்கு



■ சிரஞ்சீவி

■ விஜயபாஸ்கர்

■ குமாரவேலு

# இடமில்லையா?

மருத்துவத்தின் மகிமை உயர்ந்துவிட்ட இந்தக் கால கட்டத்தில் ஐம்பது வயது வரை இளைஞர்கள் என்ற கிரீடத்தைச் சுமந்து கொள்ளலாம். இளைஞர்கள் அரசியலில் மேலே வர முடியாமல் போனதற்குக் காரணம், உண்மையான உழைப்பும், சேவையும், மூத்தவர்களால் முழு அளவில் அங்கீகரிக்கப்படாததுதான்" என்கிறார் சிரஞ்சீவி.

மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு 'ஸீனியர் சிட்டிசன்ஸ் கவுன்ஸில்' என்ற செல்லப் பெயருண்டு. இதற்குக் காரணம், இங்கு எண்பது ப்ளஸ் வயதுத் தலைவர்களின் சொல்லாட்சி இன்றும் உண்டு.

''எங்கள் இயக்கத்தில் இளமையின் துடிப்பும் முதுமையின் அனுபவமும் கைகோர்த்து செயல்படுகிறது" என்கிறார் கட்சியின் தமிழ் மாநில செயற்குழு உறுப்பினர் ஜி. ராமகிருஷ்ணன். தமது நாற்பதாவது வயதிலேயே இந்தப் பொறுப்புக்கு வந்தவர் இவர்.

"மூத்தவர்கள் ஓய்வு பெற்று அடுத்த தலைமுறைக்கு இடம் கொடுப்பது என்பது எங்கள் இயக்கத்தில் இயல்பாக நடக்கும் ஒன்று. ஜோதிபாசு நினைத்திருந்தால் அவரே முதல்வராகத் தொடர்ந்திருக்க முடியும். ஆனால், அடுத்தவருக்கு வழி விட்டு அவர் ஓய்வு பெற்றுவிட்டார். இப்போது கட்சி எடுக்கும் முக்கியமான முடிவுகளில், இளைய தலைமுறைத் தலைவர்களான சீதாராம் யெச்சூரிக்கும், பிரகாஷ் காரத்துக்கும் நிறையவே பங்கு உண்டு" என்கிறார் ராமகிருஷ்ணன்.

தியாக மனப்பான்மையும், சேவை மனப்பான்மையும் இளைய தலைமுறைக்கு இல்லை என்பதை மறுக்கிறார் அவர். "எங்கள் இயக்கத்தில் இருந்த மதுரை லீலாவதி, குமார், ஆனந்தன், இடுவாய் ரத்தினசாமி, கண்டமங்கலம் சுரேஷ் ஆகியோர் தன்னலமின்றி சமுதாய நலனுக்குப் போராடிய இளைய தலைமுறையினர்தான். அந்தப் போராட்டத்தில் தங்கள் உயிரையும் இழந்த தியாகிகள்தான் அவர்கள்" என்று நெக்குருகக் கூறுகிறார் ராமகிருஷ்ணன்.

தமிழ்நாட்டில் உள்ள அரசியல் கட்சிகளில் இளைஞர் அமைப்புகளில் வயது வரம்பு கிடையாது. ஐம்பது வயதைக் கடந்து விட்டாலும், ஸ்டாலினையே இளைஞர் அணிச் செயலாளராக நீடிக்கச் சொல்லிவிட்டார்கள். பொன் விழா கண்ட இளைஞர் காங்கிரஸ் தலைவர்களும் உண்டு. ஆனால் அதே சமயத்தில் தமிழக பா.ஜ.க.வில் இளைஞர் அணித் தலைவரான ஜி குமாரவேலுவுக்குப் பிரமோஷன் கொடுத்து பொதுச் செயலாளராக்கி விட்டார்கள்.

"சுதந்திரப் போராட்டக் காலத்தில் இளைஞர்களுக்கு ரோல் மாடல்களாகப் பல பெரிய தலைவர்கள் இருந்தார்கள். எல்



• அன்பழகன்

• பாரமலை

வோருக்கும் அப்போது இலட்சியம் இருந்தது. அந்த இலட்சியத்தை அடைய, தியாக உணர்வும் தன்னலமற்ற சேவையும் கொண்ட இலட்சக்கணக்கான இளைஞர்கள் அரசியல் களத்தில் குதித்தார்கள். சுதந்திரத்துக்குப் பிறகு இருபது வருட காலம் அந்தத் தலைமுறை தொடர்ந்து இளைஞர்களுக்கு வழிகாட்டி வந்தது. ஆனால் கடந்த இருபது ஆண்டுகளாக சரியான வழிகாட்டுதல் இல்லை.

அரசியல்வாதிகள் செய்த ஊழல்கள், நடந்து கொள்ளும் முறை ஆகியவை இளை ஞர்களை முகம் சுளிக்க வைத்து விட்டன. இதன் காரணமாகவே இளைஞர்கள், அரசியலுக்கு வரத் தயங்குகிறார்கள். ஆனால் நிலைமை மாறிக் கொண்டு வரு கிறது. இப்போது இளைஞர்களுக்கு ரோல் மாடல் களாக வாஜ்பா யும், அத்வானியும் இருக்கிறார்கள். அருண் ஜெ யிட்லி, அருண் ஷோரி, சுஷ்மா ஸ்வராஜ் போன் றவர்கள் மூத்த வர்களால் அடையாளம் காணப்பட்டு, முக்கியத் துவம் பெற் றிருக்கிறார்கள்" என்கிறார் குமாரவேலு.



• ராமகிருஷ்ணன்

கட்சித் தேர்தல்கள் நடத்தப் பட்டு பிறகு தி.மு.க.வில் பொறுப்பிற்கு வந்துள்ளவர்கள், கிளைக் கழகத்திலிருந்து மேல்மட்டம் வரை - எழுபத்தைந்து சதம் ஐம்பது வயதுக்குக் கீழுள்ளவர்கள்தானாம். அதேபோல் இருபத்தொன்பது மாவட்டச் செயலாளர்களில் பாதிப் பேர் ஐம்பது வயதுக்குக் குறைவானவர்களே. "அடுத்த ஐம்பது வருட காலத்துக்குக் கட்சி பலமாக இருக்க, இப்போது அஸ்திவாரம் போடப் பட்டு விட்டது" என்கிறார் தி.நகர் சட்ட மன்ற உறுப்பினரும், தென்சென்னை மாவட்ட திமுக செயலாளருமான ஜெ. அன் பழகன்.

"இப்போதைய கால கட்டத்தில் முழு நேரமாக ஓர் இளைஞர், கட்சிப் பணியில் ஈடுபடுவது கஷ்டம். எங்களுக்குக் குடும்ப நிறுவனம் இருக்கிறது. அதைப் பார்த்துக் கொள்ள ஆட்கள் இருக்கிறார்கள். எனவே ஜெயிலைப் பற்றி கவலைப்படாமல் போராட்டம், மறியல் என்று கலந்து கொள் கிறேன். இப்போதும் முழுமூச்சாய் செயல் பட இது போன்ற இளைஞர்கள் கழகத்தில் உண்டு" என்கிறார் அன்பழகன்.

தமிழக அரசியல் கட்சிகளில் ஐம்பது வயதுக்கும் குறைவாக நிறையப் பிரமுகர் களைப் பெற்றிருப்பது அ.தி.மு.க.தான். அமைச்சரவையில் சராசரி வயது நாற்பத் தைந்துக்குச் சற்று கூடுதல்.

இன்றைய அரசியலில் இளைஞர்களின், (இளம் பெண்கள் உட்பட) பங்கு பெரு மளவு இருக்கிறது. இன்று தமிழ்நாட்டில் பன்னிரண்டாயிரம் பஞ்சாயத்துக்கள் உள் ளன. அவற்றின் தலைவர்களாக இருப் பவர்கள் எழுபத்தைந்து சதவிகிதம் நாற்பது வயதுக்கும் குறைவான பிரிவினர்தான். எனவே இளைஞர்கள் அரசியலுக்கு வரு வதில்லை என்பது ஒரு தோற்றம்தானே தவிர, அது உண்மையில்லை" என்கிறார் அ.இ.அ.தி.மு.க மாணவரணிச் செயலாள ரான விஜயபாஸ்கர்.

"இளைஞர்களுக்கு வாய்ப்புக் கொடுப் பதில் முன்னணியில் இருந்தவர் பெருந் தலைவர் காமராஜ்தான். அவர் தமிழகக் காங் கிரஸ் தலைவராக இருந்தபோது, சட்ட மன்றத் தேர்தலில் தேசத்துக்காகத் தியாகம் செய்த பிரமுகர்களுக்கு வாய்ப்புக் கொடுத்த அதே சமயத்தில், மூன்றில் ஒரு பங்கு புதிய இளைஞர்களுக்கும் இடம் கொடுத்தார். வாய்ப்பில்லையே என்று இளைஞர்கள் முணுமுணுக்கக் கூடாது. முதலில் தங்களைத் தகுதியுள்ளவர்களாக அவர்கள் மாற்றிக் கொள்ள வேண்டும். அதே சமயம் மூத்தவர்கள், நிர்வாகத்திலும் முக்கிய முடிவுகள் எடுப்பதிலும் இளைய தலைமுறைக்கு நிறைய வாய்ப்புகள் கொடுக்க வேண்டும். தலைமுறை இடைவெளியில்லாமல் கட்சிப் பணியைத் தொடர வைப்பதில் மூத்தவர்களுக்கு மிகப் பெரிய பொறுப்பிருக்கிறது" என் கிறார் தமிழகக் காங்கிரஸ் சட்ட மன்ற எழுபது வயது உறுப்பினர் பார மலை.

— ப்ரியன்

படங்கள்: ராஜன்

# செவ்வாய்க்குப் போலாமா? தோஷம் பார்க்க!


● ரோவர்

அமெரிக்க நாஸாவின் 'ரோவர்' கலமும் பிரிட்டிஷ் 'பீகில் - 2' கலமும் சிவப்பு கிரகமான செவ்வாய்க்குப் பறக்கப் போகின்றன. போகும் தூரம் 56 மில்லியன் கி.மீ.

பனி மலை, காற்று, தண்ணீர், எரிமலை - என்று நமக்குப் பழக்க



மானவை பல அங்கே இருக்கின்றன. வாழ்ந்த, வாழுகிற, உயிரினங்களும் ஏதேனும் அங்கே இருக்கக்கூடும் - என்ற நம்பிக்கை விஞ்ஞானிகளுக்கு. நாஸா 97ல் அனுப்பிய சர்வேயரும், ஒடிஸியும் இன்னும் அங்கேதான் இருக்கின்றன.

நாஸாவின் கலத்தைவிட பீகில் - 2 கொஞ்சம் புத்திசாலி என்கிறார்கள். 33 கிலோ எடையுள்ள ஒரு நாய்க்குட்டி வடிவிலான இது, செவ்வாயில் மீதேன் இருக்கிறதா என்று தேடும். பாறைகளை உடைத்து கார்பன் இருக்கிறதா என்று பார்க்கும். பாறைகளின் செல்களில் வேறு ஏதேனுமிருக்கிறதா என்று ஆராயும். மோப்ப சக்தி அதிகம் இதற்கு.

இம்மாதம் நாஸாவிலிருந்து புறப்படும் ரோவர்கள் வேறு டைப். சும்மா ஜாலியாக ஒரு வாக் போகும். எதிர்ப்படுவதையெல்லாம் படமெடுத்து அனுப்பும். தரையைத் துளை போட்டு மண்ணை ஆராயும்.

'மார்ஸ்; தி லிவ்விங் பிளானட்' - எழுதிய பேரி டி கிரிகாரியோ, பீகல் - 2க்குத்தான் அதிகம் முக்கியத்துவம் என்கிறார். "உயிரிகள் கண்டுபிடிக்க அதற்குத்தான் அதிகம் வாய்ப்பு. பிரிட்டிஷார் அந்தப் புகழைத் தட்டிக் கொண்டு போகப் போகிறார்கள்" என்கிறார்.

நாஸா குழு உறுப்பினரும் டெனெஸ்ஸீ பல்கலையின் ஆராய்ச்சியாளருமான மெக்ஸ்வீன் - செவ்வாயில் உயிர்கள் இருப்பது சந்தேகம்தான் என்கிறார்.

இதில் விசேஷம் என்னவென்றால், போட்டியாளர்கள் இருவருமே ஒருவருக்கொருவர் பாராட்டிக் கொள்வதும், நட்பு முறைப் போட்டியாக நினைப்பதும்தான். ஒருவருக்கொருவர் உதவவும், ஆராய்ச்சிகளைப் பரிமாறிக் கொள்ளவும் இந்த நட்பு உதவும்.

1999-ல் திரும்பி வந்திருக்க வேண்டிய, செவ்வாய்க்குப் போன ஜப்பானின் நோஸோம், வழிகாட்டிச் செலுத்துவதில் ஏற்பட்ட கோளாறினால் நான்கு வருஷங்கள் கழித்து இந்த வருஷக் கடைசியில் வரலாம் என்று எதிர்பார்க்கிறார்கள். நாஸாவின் இரண்டு கலங்கள் 99-ல் இதே போல கோளாறுகளால் தோல்வியடைந்தன.

அபாயங்கள் எதிர்பார்ப்புகளுக்கிடையே செவ்வாய்க்கிரக ரோபோ பயணங்கள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன. செவ்வாய் தோஷம் இருக்கிறதா என்று அங்கேயே போய்ப் பார்த்துக் கொண்டு வரும் காலமும் வரலாம்!

- சண்முகநாதன்



# சில்லுக் கருப்பட்டி

செண்பகத்தின் அலறல் சப்தம் கேட்டு வீட்டுக்குள் ஓடினாள் ராமக்கனி அம்மாள்.

"என்னாச்சு? என்னாச்சு?"

"பேதியில போற பய சிரெட்டைக் குடிச்சுட்டு அணைக்காம வீட்டுக்குள்ள போட்டிருக்கான். கால்ல பட்டு வெந்து போச்சு'' என்று உட்கார்ந்தவாறே சொல்லிக் கொண்டிருந்தாள் செண்பகம்.

''காலக் காமிட்டி'' என்ற ராமக்கனி அம்மாள் அதைப் பார்த்தாள். சின்னதாக வட்ட வடிவில் சிவந்திருந்தது. இன்னும் சிறிது நேரத்தில் அது கொப்பளமாக மாறும் என்பதை அறிந்து அந்த இடத்தில் பேனாவிலிருந்த 'மை'யை ஊற்றித் தடவினாள்.

"கண்ட பயலுவோ வீட்டுக்குள்ள வந்தா இப்படித்தான் சுடும்."

"எல்லாம் உன்னால வந்தது!"

"என்னாலயா?"

"ஆமா. முதல்லயே அந்தாளை வீட்டுக்குள்ள நடையேறாதன்னு சொல்லியிருந்தா இப்ப பிரச்னை வந்திருக்குமா? கண்ணன் அத்தானை மெட்ராஸுக்கு அனுப்பிச்சாச்சு. அங்க என்ன பண்ணுதாவன்னு இதுவரை ஒரு தகவலும் இல்லே. கூட்டிட்டுப் போறேன்னு சொன்னவனுவ தடிமாடு மாதிரி ஊரைச் சுத்திட்டு இருக்கானுவ."

"அவனுக்கென்னடி... அவங் குணத்துக்கு எங்க போனாலும் அவன் நல்லாதான் இருப்பான்'' என்றாள் ராமக்கனி அம்மாள்.

சென்னைக்கு வந்த ஒரு வாரத்திலேயே ஓரளவு புரிந்து கொண்டு விட்டான் கண்ணன். ருக்ரம்மாவின் செல்வாக்கில் பாரீஸ் கார்னரில் பிளாட்பாரக் கடை கிடைத்தது. கண்ணில் ஒற்றிக் கொள்ளலாம் போலான வெள்ளைப் பனியன்கள், டீ - ஷர்ட்டுகள், உள்ளாடைகளை அவன் பரப்பியிருந்த விதம் அழகாக இருந்தது. நெரிசல் மிகுந்த அந்தப் பகுதியில் கூவிக் கூவி விற்க முதலில் வெட்கமாக இருந்தது.

இப்போது பழகிவிட்டது.

அவன் கடை போட்ட முதல் நாள் நான்கைந்து துணிகளை வாங்கிக் கொண்டு அந்த இளம் பெண் சொன்ன, "நல்லாயிருக்குப்பா, உன் குரலும் துணிகளும்" என்ற வாக்கியம் அவனை நிலை குலையச் செய்யவில்லை. மாறாக, மக்களை எடை போடத் தெரிந்தது.

வரும் வருமானம் நிறையவே நம்பிக்கைத் தந்தது. நம்மாலும் முடியும் என்கிற நம்பிக்கை. மனத்தில் இருந்த அசட்டுத்தனம் இப்போது மறைந்திருந்தது. 'ஏம்பா', 'இன்னாப்பா' பாஷை மட்டும் சனியன், இன்னும் மண்டையிலேற மறுக்கிறது.

பக்கத்தில் பிளாஸ்டிக் பொருட்கள் விற்கும் பாய், திசையன்விளைக்காரர். சிக்கலான வியாபார விஷயங்களை, பிட்டுப் பிட்டுச் சொல்லிக் கொடுத்திருந்தார்.

"தம்பி, யாரையும் ஏமாத்தணும்னு நினைக்காதே. அது மட்டும் போதும். நீ முன்னேறிடலாம்." ஊர்ப் பாசத்தில் பாய் அண்ணனாகியிருந்தார்.

பணத்தைப் பத்திரப்படுத்திக் கொள்ளும் இரவுகளில் செண்பகம் கண்முன் வந்து காதல் சொல்வாள்.

'உங்களைத் திடப்படுத்திக்கோங்க'ன்னு சொல்லுவியே செண்பகம். இப்ப நான் சம்பாதிக்கறேன். சுயமா சம்பாதிக்கறேன். இப்பவாவது என்னைக் காதலிக்கறேன்னு சொல்லேன்.'

மனசுக்குள் ஏதேதோ பேச்சு நடக்கும். ருத்ரம்மா

# தாமரை மணாளன்

கடையின் மேலறை இப்போது சகஜமாகியிருந்தது. கடையில் வேலை பார்க்கும் முண்டா பனியன்காரர்கள் நண்பர்களாகியிருந்தார்கள். இவர்கள் புண்ணியத்தில் சாந்தி, தேவி தியேட்டர்கள் அறிமுகமாகியிருந்தன.

குறளகம் எதிரில் மாணவர்கள் நடத்திய போராட்டத்தில் போலீஸார் நடத்திய தடியடியைக் கண்டு அரண்டு போனான். அவன் இது போல் ஊரில் பார்த்ததில்லை. இது இங்கு சகஜம் என்பது புரிய நீண்ட நேரமாகிவிட்டது.

மெரீனாவில் நடிகர் விக்ரமையும், ஜோதிகாவையும் நேரில் பார்த்ததில், 'அட'





"நீ உலகம் விரும்பக்கூடிய ஒன்றை வைத்துக் கொண்டு காட்டின் நடுவே உட்கார்ந்திருந்தாலும், மக்கள் ஒற்றையடிப்பாதை போட்டுக் கொண்டு உன்னிடம் வந்து சேர்ந்து விடுவார்கள்"

கூறியவர்: எமர்ஸன்

- காகை. கே.ஏ. காளிமுத்து

என்று பூரித்துப் போனான். ஊரில் செண்பகத்திடமும், அம்மா, தங்கையிடமும் சொல்ல ஏகப்பட்ட விஷயங்கள் அவனுக்குள் இருந்தன.

செண்பகம் கடிதத்தைப் பிரித்தாள். கண்ணனிடமிருந்து வந்த கடிதம். பலவேசமுத்துவும் தண்டபாணியும் தன்னை ஏமாற்றியது பற்றி எதுவும் அவன் குறிப்பிடவில்லை. தனியாக பிளாட்பாரக் கடை போட்டிருப்பதாகவும் நல்ல லாபம் இருப்பதாகவும், அவன் எழுதியிருந்ததைப் படித்ததும் செண்பகத்துக்குப் புன்முறுவல்.

'இதைத்தான் எதிர்பார்த்தேன்' அத்தானே!

கடிதத்தைப் படித்து முடித்ததும் அவளுக்குள் கேள்வி எழுந்தது. 'கண்ணனை சென்னைக்கு அனுப்பியது தண்டபாணியும், பலவேசமுத்துவும். அவர்கள் எழுதித் தருவதாகச் சொன்ன கடையை எழுதித் தரவில்லையா? அது பற்றி அத்தான் ஒன்றுமே எழுதவில்லையே? பதில் போடும்போது விவரமாகக் கேட்டு எழுத வேண்டும்' என்று நினைத்துக் கொண்டாள்.

வெளியே சென்ற ஜீப் ஒன்று கவனத்தைத் திருப்பியது. போலீஸ் ஜீப்! வெளியே வந்து பார்த்தாள். ஜீப் வேகமாக மேட்டுப் பகுதிக்குச் சென்று கொண்டிருந்தது. அதற்குள் அந்தப் பகுதியில் ஒரு கும்பலே கூடிவிட்டது.

"என்ன செண்பவம், போலீஸ் ஜீப் போவுது. என்ன விஷயம்?" என்றாள் பக்கத்து வீட்டுக்காரி.

"எனக்கென்ன தெரியும்?"

"ஒருவேளை அந்த மெட்ராஸ்காரருக்குப் பாதுகாப்பா வந்திருக்குமோ? அவருதான் அரசியல்ல தலைவராம்லா."

"இருக்கும்... இருக்கும்... யாரு கண்டா?"

இவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் போதே டீக்கடை பெரிசுகள் ஜீப் நிற்கும் இடத்துக்குச் சென்றன.

செண்பகத்துக்கு, போலீஸ் ஜீப் ஏன் வந்தது என்பதை அறிய பயங்கர ஆவல். எட்டி எட்டிப் பார்த்தாள். அவள் நினைத்தது போலவே நடந்தது. பலவேசமுத்துவும் தண்டபாணியும் போலீஸ் ஜீப்பில் ஏறினார்கள். கூடவே இரண்டு சூட்கேஸ்களும். அவரைச் சுற்றிக் கூட்டம். வயதான போலீஸ்காரர், சொகுசு அக்காவிடமும் பக்கத்தில் நின்ற சில பெரிசுகளிடமும் ஏதோ விசாரித்துக் கொண்டிருந்தார். சிறிது நேரத்தில் அவர்களைச் சுமந்து கொண்டு அந்த ஜீப் பறந்தது.

ஊரெல்லாம் இது பற்றியே பேச்சாக இருந்தது.

"என்னமோ கள்ளநோட்டு அடிச்சிருக்கானாம்."

செண்பகத்துக்குத் திக்கென்றது. 'அடப்பாவிகளா? நல்லவேளை தப்பித்தோம்.'

"கள்ள நோட்டா?"

"ஆமா... ரொம்ப நாளா இதைத் தொழிலா பண்ணிட்டிருக்கானாம். முந்தா நாள் திருநெல்வேலியில என்னமோ கடைக்குப் போனானாம். ஒரு நூறு ரூவா கட்டைப் போட்டுட்டு, வீட்டுக்கு என்னமோ வாங்குனானாம். கடைக்காரனுக்கு முதல்ல தெரியலையாம். பேங்குல கொண்டு போனதும் சாயம் வெளுத்துப் போச்சு... பெறவென்ன... என்னமோ அந்தக் கட்சியில நான் அப்படி இப்படின்னு புருடா விட்டுட்டு நம்ம ஊருக்கு இப்ப வந்திருக்கேன்னு சொல்லியிருக்கான். விசாரிச்சுட்டு இப்ப வந்து போலீஸ் அமுக்கிட்டு."

'அந்த ஆண்டவன்தான் நம்ம தப்பிக்க வச்சிருக்கான்' என்று எண்ணிக் கொண்டாள். திடீரென்று கண்ணன் மேல் கரிசனம் வந்தது. அவனை நினைத்ததுமே உதட்டில் புன்னகை. சிறு வயது ஞாபகம். "கண்ணடிச்சாம் கல்யாணம்; கைப்புடிச்சாம் கல்யாணம்."

"ச்சீ..போங்கட்டி."

பக்கத்தில் யாருமில்லை. வெட்கமாக இருந்தது. கண்ணன் வந்ததும் இருவரும் சேர்ந்து கோயிலுக்குப் பொங்கல் வைக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டாள்.

சில்லுக் கருப்பட்டியின் இனிப்பு மனசு முழுதும் கசிந்து கிடந்தது.

*(முற்றும்)*

## அக்னி சர்மா பக்கம்

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்:** எடுத்தக் காரியங்களைத் திறமையுடன் செயல்பட்டு நிறைவேற்றி விடுவீர்கள் என்பதால், மனத்தில் உற்சாகம் கரை புரண்டோடும். தெளிவான மன நிலையுடன், தெய்விக பலமும் உண்டாகும். பர்ஸைத் தோண்டித் துழாவிப் பார்த்துப் பார்த்து செலவு செஞ்ச அதே கைகளாலேயே, புத்தம் புது கரன்ஸியை ஸ்டைலா எடுத்து செலவு செய்வீங்க. உத்தியோக விஷயத்திலும் சும்மா ஜில்லுன்னு ஓர் உயர்வு ஏற்படும். எதிர்பார்த்த பதவி உயர்வு, விருப்பத்துக்குரிய இட மாற்றம்னு மகிழ்ச்சி கரை புரளும். மாணவர்களுக்கு அதிர்ஷ்டமான வாரம். கிரக வழிபாடு செய்யுங்கள்; பயமுறுத்தும் பிரச்னைகள் கூட மாயமாய் மறைந்து விடும்.

**ரிஷபம்:** குடும்ப தனஸ்தானாதிபதி ராசியில் சஞ்சாரம் என்பதால், குடும்பத்தில் குதூகலம் நிறைந்திருக்கும். இதுவரை இருந்து வந்த கருத்து வேறுபாடுகள் யாவும் நீங்கி, இனிமையான சூழ்நிலை உருவாகும். புதிய பொருள் சேர்க்கை, எதிர்பார்த்த நல்ல செய்தி வந்து பெண்களை சந்தோஷக் கடலில் ஆழ்த்தும். கலைத்துறை, சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் ஆகிய இனங்களில் மாமூலான பலன்கள் தடைப்படாது. குறிப்பாக, வியாபாரிகளுக்கு பயணங்களால் ஆதாயம் கிடைக்கும். கொடுக்கல் _ வாங்கல் சுமுகமாக இருக்கும் என்றாலும் அறிமுகமில்லாத புதிய நபர்களிடம் கவனம் தேவை!

**மிதுனம் :** உங்கள் ஜாதகப்படி, குரு பலம் கூடியிருப்பதால், குடும்பத்தின் வளமான எதிர்காலத்துக்கான அஸ்திவாரம் அமைக்கப்படும். சுப மங்கள காரியங்கள் நிறைவேறும். குறிப்பாக, திருமணம் தள்ளிப் போகும் பெண்களுக்கு, சிறப்பான இடத்தில் வரன் அமையும். பூர்வீக சொத்து, மனை, நிலம், வீடு, இந்த வகையில் அனுகூலம் உண்டாகும். மாணவர்களில் ஒரு சிலருக்கு மேல்நாடு, மேற்படிப்பு என அதிர்ஷ்டமான வாய்ப்புகள் கனிந்து வரும். ஏழரைச் சனி இரண்டாவது சுற்று நடைமுறையில் உள்ளவர்கள் கிரக வழிபாடு செய்து வரவும், மன அமைதி உண்டாகும்.

**கடகம் :** சூரிய பகவான், 12ல் சனீஸ்வரனுடன் சஞ்சாரம் என்பதால், செலவினங்கள் கட்டுக்கடங்காது. நாலணா வரவு வந்தா, செலவு நாலு ரூபாயாகிவிடும்! அப்புறம் பட்ஜெட்டில் துண்டு விழாமல் என்ன செய்யும்? எனவே பொருளாதார நெருக்கடியை உத்தேசித்து, மிக கவனமாக செலவு செய்யவும். குருபகவான் ராசியில் உலவுவதால், ஓட்டாண்டி ஆகிவிட மாட்டீர்கள் என்றாலும், தேவை சிக்கனமான வாழ்க்கை. மாணவர்களின் உழைப்பும் திறமையும் வீண் போகாது. ரியல் எஸ்டேட்காரர்களுக்கு மிக முன்னேற்றமான காலம்.

**சிம்மம் :** "என்னவோ... டயமே சரியில்லை. குல தெய்வப் பிரார்த்தனை ரொம்ப நாளா செய்யாம தள்ளித் தள்ளிப் போகுது" என்று விசனப்பட்டுக் கொண்டிருந்தீர்கள் அல்லவா? இதோ... இந்த வாரம் முயன்று பாருங்கள். கண்டிப்பாக நிறைவேறும். மனசாந்தியும், குதூகலமும் உண்டாகும். பெண்களைப் பொறுத்தவரை, அதிர்ஷ்டமான வாரம். தொட்டது துலங்கும். கை பட்டது கலக்கும்! புதிய பொருள் சேர்க்கை, சரளமான பண வசதி, தாய்வீட்டு ஆதரவு என சந்தோஷமாக வளைய வருவார்கள். எழுத்து, பத்திரிகை, அச்சுத் துறைக்காரர்கள் நிறைய சில்லறை சேர்ப்பார்கள்.

**கன்னி :** விவகாரங்கள் எல்லாம் விலகி வழிவிடுவதால், 'வீட் அல்வா' போல இனிக்க ஆரம்பிக்கவிருக்கிறது உங்கள் வாழ்க்கை. 9ல் ஆட்சியாக ராசிநாதனுடன் சஞ்சாரம் செய்து கொண்டிருக்கும் குடும்பஸ் தானாதிபதி சுக்கிரனுக்கு நன்றி சொல்லுங்

## ஜூன் 18 முதல் 24 வரை

கள்... அவருடைய கிருபையால்தான் குடும்பத்தில் ஒற்றுமை, மக்களிடம் குதூகலம், பொன் பொருள் சேர்க்கை என ஜமாய்க்கப் போகிறீர்கள். பெண்களுக்கு ஆரோக்கிய மேன்மை உண்டாகும். நல்லவர்கள் சகவாசம் நன்மையே தரும் என்பதை உணர்ந்து சத்சங்கத்தில் இணைந்து குருவருள் பெறுக.

**துலாம் :** உங்கள் ராசிநாதன் சுக்கிரன், எட்டாம் இடத்தில் ஆட்சி பெற்று, புதன், ராகுவுடன் சஞ்சரிக்கிறார் என்பதே மிக நல்ல விஷயம்தான்! கூடவே குரு பகவானும், குடும்ப தன ஸ்தானத்தைப் பார்ப்பதால், சுப மங்கள காரியங்கள் மனம் போல நிறைவேறும். திருமண முயற்சிகள் நிறைவேறும். குடும்பத்தில் அரசல்புரசலாக இருந்து வந்த மன வேற்றுமைகள், இனிதே களையப்

**நடிகர் நந்தாவுக்கு (கடகம்) சிக்கனம் அவசியமாமே!**



படும். புதிய வீடு, வாகன யோகம் ஏற்படும். சாதுக்கள், ஸ்ராவிகள், தொடர்பு மன அமைதி தரும். உடல் நலத்தில் கவனம் தேவை. சிறு உபாதைகள் வந்து படுத் தும்.

**விருச்சிகம் :** கமிஷன் ஏஜெண்ட், காண்ட்ராக்ட்ஸ், இயந்திரம், உலோகம், தோல் பொருள், எண்ணெய் வகை மற்றும் ஏற்றுமதி இறக்குமதி போன்றவை சிறப்பான ஆதாயம் கொண்டு வரும் என்பதால் சம்பந்தப்பட்டவர்கள் களிப்புடன் உழைக்கவும், குடும்பத்தில் கணவன் – மனைவி உறவு இனிமையாக அமையும். மக்களால் பெருமை அடைவீர்கள். எதிர்பார்த்த நல்ல செய்தி வந்து சேரும். ஸ்பெகுலேஷன் துறை அனுகூலம் தரும். சுயதொழிலில் எதிர்பாராத திருப்பங்கள் காத்திருக்கின்றன என்றாலும் அகலக்கால் வைக்கக் கூடாது.

**தனுசு :** உத்தியோக விஷயத்தில் உற்சாகமான வாரமாக அமையக் கூடும் என்பதால் பிடியுங்க அட்வான்ஸ் வாழ்த்துக்களை. செவ்வாய் 3ம் இடத்தில் அமர்ந்து, அந்த வீட்டின் அதிபதியான சனி 7ல், சூரியனுடன் என்பதால், உத்தியோகத்தில் சகல வகையிலும் நல்ல திருப்பம் உண்டாகும். அரசுப் பணியாளர்களுக்கு ஏறுமுகமான அமைப்பு. அரசியல்வாதிகளின் மதிப்பும் செல்வாக்கும் கூடும். வேலையில்லாமல் அவதிப்படுபவர்கள், இந்த வாரம் புதிய முயற்சிகளில் உற்சாகத்துடன் ஈடுபடலாம்.

**மகரம் :** குடும்பச் சூழ்நிலையில் முன் எப்போதும் இல்லாதபடி, இன்பமான உறவு நிலை இருக்கும். குரு பலம் பரிபூரணமாக நிறைந்திருப்பதால், பொன், பொருள், ஆடை, ஆபரணச் சேர்க்கை அமையும். திருமண முயற்சிகள் கூடிவரும். புத்திர பாக்கியமும், அதனால் மகிழ்ச்சியும் உண்டாகும். கோர்ட்டு, வழக்குகளில் வெற்றி உண்டாகும். பெண்களின் நோக்கம் நிறைவேறும். உடல் ஆரோக்கியமேன்மை, தெய்வ பலம், தெய்விக ஸ்தல யாத்திரை, போன்றவை கூடி வரும். சரளமான பண வசதி இருக்கும் என்பதால், சுபச் செலவுகளை, அநாயாசமாகச் சமாளித்து 'சபாஷ்' பெறுவீர்கள்.

**கும்பம் :** குடத்தில் இட்ட விளக்காக, ஒரு சின்ன வட்டத்துக்குள் புழுங்கிக் கொண்டிருந்த நீங்கள், இனி, குன்றிலிட்ட விளக்காக ஜொலிக்கப் போகிறீர்கள். அதற்கான திருப்பங்கள் இந்த வாரம் அமையக் கூடும். குறிப்பாக உத்தியோக வகையில், ஏற்றம் தரும் பல நல்ல திருப்பங்களைச் சந்திப்பீர்கள். மறைமுகப் பிரச்னைகள் யாவும் தீரும். எடுத்த காரியங்களில் திறமை காட்டி, மேலதிகாரிகளின் பாராட்டைப் பெறுவீர்கள். கூட்டுத் தொழில் நல்ல லாபம் காட்டும். சொத்து சம்பந்தமான பிரச்னைகள் நல்லபடியே முடியும்.

**மீனம் :** ராசிநாதன் குரு பகவான் ஐந்தாம் இடத்தில் உட்கார்ந்து பூர்வ புண்ணியஸ்தானத்தில், உச்சம் பெற்று, சஞ்சாரம் செய்கிறார் என்பதால், தெய்வ பலம் நிறைந்திருக்கிறது. இதனால் தன்னம்பிக்கையும், அளப்பரிய ஆற்றலும் கொண்டு, காரியங்களில் இறங்குவீர்கள். உத்தியோகம் சார்பாக மேற்கொள்ளும் பயணங்கள் அனுகூலம் தரும். படுத்தி எடுத்துக் கொண்டிருந்த உடல்நிலை, சற்று மேன்மைப் படும். உறவினர், நண்பர்களிடமிருந்து எதிர்பார்த்த பண உதவி கிடைக்கும். வெளிநாட்டுத் தொடர்பு நன்மையே தரும்.

# எஃப்.எம். குயில்கள்!

**சூரியன் எஃப்எம் ஜாக்கி களின் சுவையான பயோடேட்டா உங்களுக்காக :**



* கடி தீனா



* அனுராதா



* பவித்ரா

**'சிக்கி' சித்ரா :**

சின்ன வயசிலிருந்தே ரேடியோவில் பேச வேண்டும் என்று ஆசைப்பட்டவர் 'சிக்கி' என்கிற சித்ரா. பள்ளியில் படித்தது இந்தி. ஆனாலும் தமிழ் உச்சரிப்பு சரளம்.

அதென்னங்க சிக்கி?

''நான் காலேஜ்ல படிச்சப்போ, நானும் என் ஃப்ரெண்ட்ஸும் கேன்டீன் போனால், எல்லாம் தீர்ந்து போய் வேர்க்கடலை பர்பி தான் இருக்கும். எனக்கு ரொம்பப் பிடிக்கும். இந்தியில அதுக்கு 'சிக்கி'ன்னு பெயர். தோழிகள்லாம் சிக்கின்னு கூப்பிட ஆரம்பிச்சுட்டாங்க. ரேடியோவுக்கும் அதையே வச்சுக்கிட்டேன்.''

**காதல் கலாட்டா :**

நட்சத்திர நேரம், காதல், காதல் ஆகிய இரு நிகழ்ச்சிகளையும் நடத்தும் சித்ரா எத்திராஜ் கல்லூரி மாணவி. விஜய் டீவியில் மூணு மாசம் பணிபுரிந்திருக்கிறார்.

''என் அப்பாதான் எனக்கு இன்ஸ்பிரேஷன். அவர் ஒரு நடிகர், ஹாக்கி ஆட்டக்காரர், எழுத்தாளர். நட்சத்திர நேரம் நிகழ்ச்சிக்காக, நான் பல்வேறு சினிமா ஸ்டார்களையும் பற்றி ஸ்கிரிப்ட் எழுத விஷயதானம் செய்பவர் அவர்தான். காதல் காதல் என்ற என் புரோகிராம் சென்னை காதலர்கள் மத்தியில் ரொம்பப் பிரபலம். சிலர் 'நான் இவரை லவ் பண்றேன்னு சொல்லுங்களே'ன்னு நச்சரிக்கிறாங்க. இதெல்லாம் நடக்கற காரியமா? இந்த நிகழ்ச்சி மூலமா ஒருத்தரோட லவ் டெவலப் ஆகி கல்யாணத்துல முடியப் போகுதுன்னு இன்விடேஷன் அனுப்பிச்சிருக்காங்க. காதலர்களை வாழ வைத்த புண்ணியம்! புல்லரிச்சுப் போகுது.''

**பிளேடு நெம்பர் ஒன் :**

பிளேடு தீனாவின் இயற்பெயர் தீனதயாளன். சொந்த ஊர் சேலம். என்ஜினியரிங் படிப்பு ஒசூரில்.

''ஹாஸ்டல் ரூமில் அடைபட்டுக் கிடந்த என் மிமிக்ரி திறமையை, ஹாஸ்டல் நிகழ்ச்சியில் மேடை ஏற்றி ஊக்கப்படுத்திய வார்டனுக்கு வாழ்நாள் முழுவதும் நன்றிக் கடன் பட்டவன் நான்'' என்கிறார். பல மேடைகளில் மிமிக்ரி செய்து, படிக்கிற

காலத்தில் பாக்கெட் மனி சம்பாதித்தவர்.

சினிமாவிலும் தலையை நுழைத்திருக்கிறார் தீனா. இவரது சிருஷ்டியான 'கலக்கல் கடியப்பரின் தத்துவங்கள்', 'கடியின் கிளைமேக்ஸ்' என்று பெயர் வாங்கியிருக்கிறதாம்!

ஒரு சிறுமி, "ஜாக்கிரதையாய்ச் சாப்பிட வேண்டிய காய்கறி நாலு சொல்லுங்கள்" என்று கேட்க, இவர் யோசித்து விட்டு, 'முன்'ளங்கி, 'கத்திரி'க்காய் என்றவுடன், "மீதி ரெண்டு? உங்களுக்கு மூளை வேலை செய்யாதா?" என்று கேட்டதாம். "அட! இதுவரை யாருக்கும் தெரியாதுன்னு நான் நினைச்ச விஷயம் உங்களுக்குத் தெரிஞ்சு போச்சே!" என்று சொல்லிச் சமாளித்தாராம்!

சிறுமி சொன்ன மீதி இரண்டு காய்கறி, இன்னொரு முள்ளங்கி, இன்னொரு கத்திரிக்காய்!



* பனப்பாக்கம் சுகுமார்

**மசாலா நடராஜன் :**

தென்கச்சி சுவாமிநாதனுக்கு வாரிசு இவர்தானோ என்று சொல்லுமளவுக்கு பொன் மொழிகள், குட்டிக் கதைகள், உபயோகமான விஷயங்கள் என்று தினம் வாரி வழங்கிக் கொண்டிருக்கிறார் நடராஜன். படித்தது லயோலாவில் தமிழ் இலக்கியம். "வாரத்துக்கு இருபது புத்தகங்களாவது படித்து முடிப்பது என் லட்சியம்" என்கிறார். கதைகளுக்கு காரணம் இதுதானா?

* நடராஜன்



* சங்கர்

***2003-ஒரு லவ் ஸ்டோரி :***

வள்ளியம்மாள் கல்லூரியில் ஃபிசிக்ஸ் முடித்த பவித்ரா ரேடியோவுக்கு வரும் முன்பே அம்பத்தூர், ஆவடி பகுதிகளில் பிரபலமானவர். அங்கே லோக்கல் கேபிள் டி.வி.யில் நிகழ்ச்சிகளை வழங்கியிருக்கிறார். தாய் மொழி தெலுங்கு. குரல்வளம் + நல்ல தமிழ் இரண்டும் இவரது பிளஸ் பாயிண்ட். மகளிர் மட்டும், பாட்டும் மெட்டும் இந்த இரண்டும் பவித்ரா வழங்கும் நிகழ்ச்சிகள்.

---

**ப**ழுத்த மிளகாயைச் சாப்பிடக் கொடுத்தால், உங்களால் எத்தனை மிளகாய் சாப்பிட முடியும்? ஒண்ணு... ரெண்டு. ஆ... எரியுதே! ஒரு மிளகாய் தின்றால் ஒரு பெப்சி என்று சொன்னால்? இன்னும் ரெண்டு உள்ளே போகுமா?

ரேடியோ மிர்ச்சிகாரர்கள் 'சிவப்பு மிளகாய் கடிங்க; பெப்சி குடிங்க' என்று ஒரு சவால் வைத்ததில் காலேஜ் பசங்கள் மத்தியில் செமப் போட்டி. ஒரு மாணவி, நாற்பது மிளகாய் தின்று, அதே அளவு பெப்சி, அள்ளிக் கொண்டு போனது ஒரு சென்னை சாதனை.

அடுத்து, ஃபுட் வோர்ல்டு சூப்பர் மார்க்கெட்டில். காய்கறி வாங்க வரும் பெண்மணிகளுக்கு, இலவசமாய் ஒரு சிவப்பு மிளகாய் பாக்கெட்.

இப்படி, 'செக்கச் சிவந்த மிளகாய்' போல ஹாட்டான எஃப்.எம். ரேடியோதான் மிர்ச்சி என்று விளம்பரப்படுத்த பல யுக்திகளைக் கையாண்டோம்" என்கிறார் ரேடியோ மிர்ச்சியின் தலைமைப் பொறுப்பில் இருக்கும் சரத் சந்திரா.

பல சுவாரசியங்களைப் பகிர்ந்து கொண்டார் :

* இந்திய நகரங்களிலேயே,

பாட்டும், மெட்டும் பகுதிக்காக ஏதாவது ஒரு சப்ஜெக்ட் எடுத்துக் கொண்டு, அது சம்பந்த மான பாடல்களை வழங்குவது பழைய ஐடியா என்றாலும், இவர் எழுதிப் பேசும் ஸ்கிரிப்ட் புதுசு. சமீபத்தில் இவர் வழங்கிய 2003- ஒரு லவ் ஸ்டோரி சூப்பர் ஹிட். இளைஞனும், இளைஞியும் சந்திப்பதில் தொடங்கி, திருமணத்தில் முடியும் காதலை, ஒரு கதை போல எழுதிப் பாட்டுக்களைப் போட்டு அசத்தினார்.

**மிஸ் - மிஸஸ்?**

காலையில் ஆறு மணிக்கு சூரியன் ரேடியோவில் ஒலிக்கும் குரலுக்குரியவர் கண்மணி. "நேயர்களுக்கு ஏற்படும் பெரிய சந்தேகம் எனக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா? இல்லையா? என்பதுதான். அப்பப்பா? எத்தனை பேர் விசாரிக்கிறார்கள்?'' என்கிறார் கண்மணி. சொந்த ஊர் சிதம்பரம். நாலைந்து நாவல்கள் + சிறுகதைகள் எழுதியிருக்கிறார்.

**பனப்பாக்கம் சுகுமார் :**

பதினைந்து வருட ரேடியோ அனுபவம். சினிமா, சீரியல்களில் நடித்திருக்கிறார். எம்.ஏ. தமிழிலக்கியம் படித்த இவர், 'ஏவி. மெய்யப்ப செட்டியாரும், தமிழ் சினிமாவும்' பற்றி ஆராய்ச்சி செய்து வருகிறார்.

**அனுராதா உன்னி :**

சூரியன் எஃப்எம் ரேடியோவின் துவக்க நாளன்று முதலில் ஒலித்த குரலுக்குரியவர் இவர். படித்தது இந்தி. ஆனாலும் தமிழில் நன்கு பேசத் தெரியும். இவர் பாடிய கேஸட்கள் வந்துள்ளன.

**ஊர் சுற்றும் சங்கர் :**

ஊர் சுற்றலாம் நிகழ்ச் சிக்காக தினமும் பிற்பகலில் சென்னை நகரில் பிஸியான பகுதிகளில் செல்போன் சகிதம் நிற்கும் ஒடிசலான இளைஞர் இவர். ஸ்பாட்டிலிருந்து, செல்போன் மூலம், இவர் பொது மக்களைப் பேச வைக்க, அது நேரடி யாய் ஒலிபரப்பாகிறது. இவர் போகிற இடங்களில், டிராஃபிக்ஜாம் ஏற்படுவது வாடிக்கையாகிவிட்டதாம்.

"முதல் நாள் முப்பது பேர் கூடினார்கள். இப்போதெல்லாம் முன்னூறு பேருக்குக் குறைவதில்லை. இத்தனைக்கும், நிகழ்ச்சி ஆரம்பிப்பதற்கு அரை மணி நேரம் முன்புதான் நான் எங்கே வருவேன் என்று அறிவிக்கப்படுகிறது'' என்கிறார் சங்கர்.

**- எஸ். சந்திரமௌலி**

படங்கள் : **யோகா**

* கண்மணி

* சிக்கி



சென்னையில்தான் ரேடியோ கேட்கும் கலாசாரம் அதிகம். (40% என்பது புள்ளி விவரம்)

* சென்னைவாசிகளில் பதினைந்து வயது முதல் முப்பது வயது வரையுள்ளவர்கள் சுமார் இருபது லட்சம் பேர். இவர்கள்தான் எங்கள் பிரதான இலக்கு.

* எங்கள் தொகுப்பாளர்களுக்கு சரளமான (ஆங்கிலம் கலந்த?) பேச்சுத் தமிழ், நகைச் சுவை உணர்வு, உரையாடல் திறமை. உற்சாகம் + நட்புடனான குரல் இவை எல்லாம் உண்டு. பிரிட்டனிலிருந்து ஒலிபரப்பு நிபுணர்களை வரவழைத்து பிரத்யேகப் பயிற்சி கொடுத்திருக்கிறோம்.

* மாதவனுக்கு பிறந்த நாள் வாழ்த்துச் சொல்லலாம் என்று அறிவித்ததுதான்! வாழ்த்துத் தெரிவித்தவர்கள் எத்தனை பேர் தெரியுமா? ஆறாயிரம் பேர்.

* ரேடியோ மிர்ச்சியின் ஸ்பெஷாலிடி மூணு, நாலு நிமிடங்களுக்கு ஒருதரம் மணி என்ன என்று சொல்வது. இது மிகவும் உபயோகமாக இருப்பதாக (குறிப்பாக காலை நேரத்தில்) ஏகப்பட்ட பாராட்டு.

மகான் கபீரின் வாழ்வில் நடந்த ஒரு சம்பவம். தாம் நெய்த துணியைச் சந்தையில் விற்பதற்காகக் கொண்டு போனார். போகிற வழியில், குளிரில் நடுங்கிக் கொண்டிருந்த ஒருவனைக் கண்டார். உடலுக்கு உடையில்லாமல் இருந்த அவனுக்கு உதவி செய்வதற்காகத் தம்முடைய துணியில் பாதியைக் கிழித்துக் கொடுக்கத் தயாரானார். அவனோ, 'கொடுத்தால் முழுதுமாகக் கொடுங்கள்; இல்லையெனில் எனக்குப் பயனில்லை', என்றான். முழுத் துணியையும் கொடுத்துவிட்டார்.

சந்தையில் எதைக் கொண்டுபோய் விற்பது? வருமானம் இல்லாமல் மெல்லத் திரும்பினார்.

இவர் வீடு சென்று சேர்வதற்கு முன்பாகவே, வீட்டிலிருந்த இவரின் தாயாரைச் சந்தித்தான் ஒருவன். கபீர் கொடுக்கச் சொன்னதாகச் சொல்லி, துணிக்கான விலையென்று ஒரு தொகையைக் கொடுத்துச் சென்றான்.

வீடு திரும்பிய கபீர், தாயார் சொன்ன செய்தியைக் கேட்டுத் திகைத்தார். தாயும் திகைத்தாள்.

"அந்த ஏழைக்குத் துணி கொடுத்ததை யாரும் பணக்காரர் பார்த்துவிட்டாரரோ, மகனே?"

"இல்லையே அம்மா!"

யோசிக்க யோசிக்கப் புரியத் தொடங்கியது. மனிதர்கள் யாரும் பார்க்கவில்லை. ஆனால் பகவான் பார்த்துவிட்டார். ஸர்வ ஸாக்ஷியாய் உள்ள ஆண்டவன் பார்த்துவிட்டார்.

கடவுளுக்கு அர்ச்சனை செய்யும்போதே 'ஸர்வ ஸாக்ஷின்யை நம!' என்று ஓதப்படுவதைப் பலமுறைக் கேட்டிருக்கிறோம். ஸ்வேதாஸ்வதர உபநிஷதம்,

டாக்டர் சுதா சேஷய்யன்

# ஆயிரம் பார்வையிலே...

பரம் பொருளை 'உலக சாட்சி' என்றே வர்ணிக்கிறது.

நாம் செய்வதையெல்லாம் கடவுள் பார்த்துக் கொண்டேயிருக்கிறார்.

தெய்வத்தின் பார்வை, எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கும் என்பது சனாதன தர்மத்தின் அசைக்க முடியாத நம்பிக்கை. ஸர்வ லோகத்தையும், ஸர்வ மக்களையும், ஸர்வ செயல்களையும் கடவுள் கண்காணித்துக் கொண்டேயிருக்கிறார். அவரிடமிருந்து எதையும் மறைத்துவிட முடியாது. எல்லாவற்றையும் பார்ப்பது மாத்திரமில்லை, எங்கெல்லாம் நன்மை நடக்கிறதோ, நன்மை செய்யப்படுகிறதோ அங்கெல்லாமும் தெய்வத்தின் அருள் பார்வை பாய்கிறது.

**ம**காகவி பாரதியார், இருபதாம் நூற்றாண்டின் ஆரம்ப ஆண்டுகளில் நடைபெற்ற ருஷ்யப் புரட்சியைக் கண்டு பாடினார்.

"மாகாளி பராசக்தி ருஷ்ய நாட்டினில்
கடைக்கண் வைத்தாள்
ஆகாவென்று எழுந்தது பார்
யுகப் புரட்சி"

என்று அதனை விவரித்தார். இந்த வரிகளை நினைக்கும்போது வியப்பாகவே இருக்கும். எங்கோ ஏதோ ஒரு நாட்டில் எத்தனையோ மைல்களுக்கு அப்பால் நடந்த புரட்சிக்குக் காரணம் அம்பாளின் அருள் பார்வையா? அயல்நாட்டுப் புரட்சிக்கும் அன்னை பராசக்திக்கும் என்ன சம்பந்தம்?

**பா**ரதியாரின் அம்பாள் ஆராதனைக்கான ஆதாரம் ஆதிசங்கரரிடத்தில் இருக்கிறது.

பராசக்தியின் பார்வையின் சிறப்புகளைப் பாடுகிறார் சங்கர பகவத்பாதர். பல்வேறு சந்தர்ப்பங்களில் பல்வேறுவிதப் பார்வைகளைக் கொண்ட லோகமாதா, பல இடங்களுக்கும் தன் கடைக்கோடி பார்வையைப் படர விடுகிறாள். பல நகரங்களுக்கும் அவளின் கடாக்ஷம் பரவுகிறது. அங்கெல்லாம் அருளைச் சொரிகிறது; அறத்தை நிலை நிறுத்துகிறது.

'விசாலா கல்யாணீ ஸ்புடருசி:
அயோத்யா குவலயை;
க்ருபாதாரா தாரா கிம் அபி மதுரா
ஆபோக வதிகா
அவந்தீ த்ருஷ்டிஸ்தே பஹுநகர
விஸ்தார விஜயா
த்ருவம் தத் தத் நாம வ்யவஹரண
யோக்யா விஜயதே'

என்பது சங்கர வாக்கு. விசாலா, கல்யாணி, அயோத்யா, தாரா, மதுரா, போகவதி, அவந்தி, விஜயா ஆகியவை சங்கரர் காலத்தில் (சில இக்காலத்திலும்) பிரசித்தியாய் விளங்கிய நகரங்கள். அதே சமயம், இந்தப் பெயர்கள் பார்வையின் பலவிதங்களையும் குறிக்கின்றன. மலர்ச்சியுடன் கூடிய பார்வை 'விசாலா' என்பதாகும். மந்தஹாஸத்துடன் கூடிய பார்வை 'கல்யாணி' என்பதாகும். சிநேகத்தோடு கூடியது 'போகவதி'. இப்படிப்பட்ட பலவிதமான பார்வைகளில், கடைக்கண் பார்வையான கடாக்ஷத்துக்கு 'விஜயா' என்று பெயர்.

பராசக்தி தன்னுடைய கடைக்கண் பார்வையைப் பற்பல திசைகளுக்கும் பரவ விடுகிறாள். பல நகரங்களுக்கும் அவளின் அருள் பார்வை பயணிக்கிறது. அதுதான், 'பஹு நகர விஸ்தார விஜயா'. வெறுமே பயணிக்கவில்லை, விஸ்தாரமாகவே (விரிவாகவே) பயணிக்கிறது. அதுவும் விஜயத்தைத் (வெற்றியைத்) தரும்படி பயணிக்கிறது.

அம்பாளின் பார்வை என்னவோ கடைக்கோடிப் பார்வைதான். ஓரக் கண்

ணால் அவள் பார்ப்பது மாதிரித் தோன்றி னாலும், அந்த ஜகன்மாதாவின் கடாக்ஷமே வெற்றியைத் தந்துவிடும். ஓரக்கண்ணால் தான் அவள் நோக்குகிறாள்; ஆனால் எல்லாவற்றையும் காண்கிறாள்; எங்கெங்கும் காண்கிறாள்; எப்போதும் காண்கிறாள். தவறுகள் நடந்தால் அவற்றை அழிக்கும் அவளின் அருள்பார்வை, நன்மைகள் நடக்கும்போது அவற்றை ஆதரிக்கும் அந்த அகிலாண்டேஸ்வரியின் அருளோடு கூடிய கருணைக் கடாக்ஷத்தால் அறம் தழைக்கும்; வெற்றி எட்டுத் திக்கும் எட்டும்; அதர்மப் புரட்டல்கள் அகன்று நியாயப் புரட்சிகள் எழும். பஹு (பல) நகரங்களுக்கும் பராசக்தி யின் பார்வை விஸ்தாரமாகப் பரவி விரவு வதை, ஆதிசங்கரர் விவரித்ததை, உள்வாங் கிக் கொண்டார் பாரதியார். அம்பாள் உபாச கராக இருந்து தன்னை 'சக்திதாசன்' என்றே அழைத்துக் கொண்ட பாரதியார், மாகாளி யின் மகத்துவப் பார்வைதான் அப்போ தைய மக்கள் எழுச்சியான ருஷ்யப் புரட்சிக் கும் காரணம் என்று பாடினார். திரு வானைக்காவிலும் சமயபுரத்திலும் மட்டு மல்ல, அன்னை பரமேஸ்வரியின் அருள் நோக்கம் லெனின்கிராடுக்கும் மாஸ்கோ வுக்கும் விரைந்து விரவியது நியாயம்தானே!

அங்கிங்கு எனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்தது இறைவனின் திருப்பார்வை என்று ஆணித்தரமாக உரைக்கிறது சனா தன தர்மம்.

## கடவுளின் பார்வை எதுவரை பாயும்?

இடுப்பில் கிழிசல் துணியில் அவலைக் கட்டிக் கொண்டு சென்ற குசேலர், தாம் கொண்டு வந்த அவலைப் பற்றிக் கிருஷ் ணரிடம் சொல்லவில்லை. ஆனால், பகவான் பரமாத்மா அதைப் பார்த்து விட்டார்.

துரியோதனன் அவையில் அவமானத்துக் காளான திரௌபதி தவித்தாள்; கதறினாள். அங்கிருந்தவர்கள் அதனைப் பார்த்தார்கள்; பார்த்தும் ஏதும் செய்யாது இருந்தார்கள். ஆனால், அங்கிருந்து வெகு தொலைவில் இருந்த பரமாத்மா, தன் அருள்கடாக்ஷத்தால் அங்கு நோக்கினார்.

கல்லெடுத்து மண்ணெடுத்து கவின்மிகு சிலையெடுத்துக் கோயில் கட்ட ஆசைப் பட்டார் திருநின்றவூரைச் சேர்ந்த பூசலார்; கையில் பொருளில்லாமல் தவித்தார்; பொருள் தேடிப் பார்த்தார்; கிட்டவில்லை. கடைசியில் தனக்குத்தானே ஒரு வழி கண்டுபிடித்தார். 'நிலத்தைச் செப்பனிட்டு நெடுங்கோயில் கட்டுவதை விட மனத்தைச் செப்பனிட்டு மனக்கோயில் கட்டலாம்' என்று அவ்வாறே ஆலயம் எழுப்பினார். இது

சாதாரணமாகப் புழக்கத்தில் இருக்கும் சொல் 'பயபக்தி' என்பது! அது ஏன் பயம் + பக்தி? கடவுளிடத்தில் பக்திதானே இருக்க வேண்டும் - தெய்வம் நமக்கு அணுக்கமானவர்' என்று சொல்லிவிட்டு அவரிடம் 'பயம்' என்று வேறு விரிசல் ஏற் படுத்தினால், பின் தெய்வத்திடமிருந்து தள்ளிப் போய்விட மாட்டோமா? 'பக்தி' என்பது அன்பு வயப்பட்டது; 'பயம்' என் பது அச்சம் தொடர்பானது. இரண்டையும் சேர்க்க முடியுமா?

சின்னக் குழந்தையைத் தாய் மிரட்டு வாள்: 'அம்மா உன்னிடம் பேசவே மாட் டேன் போ' மெய்மையாகவே தாய், குழந்தையை விட்டு விலகியா போகிறாள்? விவரம் புரியாமல் தடுமாறும் குழந்தை யைச் சரியான பாதையில் நடை பழக்க வேண்டும் என்றால், சற்றே பயங்காட்டித் தானே தீர வேண்டும்! அது போலத்தான் இதுவும்.

மனித மனம் அலைபாயக் கூடியது. 'இந்த இடத்தைத் தொடாதே!' என்றால் சற்றே பயங்காட்டித்தானே தீர வேண்டும்! அதுபோலத்தான் இதுவும்.

மனித மனம் அலைபாயக் கூடியது. 'இந்த இடத்தைத் தொடாதே!' என்று அறிக்கை எழுதிப் போட்டால், 'தொட்டுப் பார்த்தால் என்னாகிவிடும்? தொட்டுத்தான் பார்ப்போமே!' என்று விட்டத்தில் பாயும். அத்தகைய மனத்தைச் செம்மைப்படுத்த வேண்டுமென்றால், ஓரளவுக்குப் பயம் தேவை. யதார்த்தமாகச் சிந்திப்போம். யாரும் பார்க்கவில்லையென்றால் தப்புப் பண்ணக் கைவரும், மனிதர்கள் யாரும் காணவில்லை யாயினும் கடவுள் கண்டு கொண்டேயிருக் கிறார் என்றால் தவறிழைக்கக் கைவராதல் லவா?

அதனால்தான், முதலில் அச்சம்; பின் மரியாதை. பயமும் அதனைத் தொடர்ந்து பக்தியும். விளையாட்டே சில சமயங்களில் விபரீதமாவதுபோல், அன்பு அதீதமானால் நெறி தவறிவிடலாம். அன்புடன் மரியாதை

யாருக்கும் தெரியாது. மனிதர்கள் யாரும் இதைப் பார்க்கவில்லை. ஆயின், மகேசன் பார்த்து விட்டார். பார்த்தது மட்டுமின்றி, இதனைக் குறித்துப் பல்லவ மன்னனிடம் சென்று சொல்லியும் விட்டார். அதனால்தான், பல்லவ மன்னன் தேடி வந்த போது, பூசலார் உள்ளக்கோயில் கட்டிய விவகாரம் வெளியில் தெரிந்தது.

(குசேலரின்) இடுப்பு வரை பாய்ந்த தெய்வ கடாக்ஷம், (திரௌபதியின்) இருப்பு வரையும் பாய்ந்தது. அதே கடாக்ஷம், பூசலாரின் இதயம் வரையும் பாய்ந்தது. இதயத்திற்குள்ளும் பாய்ந்தது. நன்மைகளை நிகழ்த்தும்போது நம்மை ரக்ஷிக்கும் இறையருள் பார்வை, தீமைகளைச் செய்தால் என்ன செய்யும்?

குருக்ஷேத்திர யுத்தம் முடிகிற தருவாயில், தன்னை மறைத்துக் கொள்ள நினைத்து மடுவிற்குள் சென்று மறைந்து கொண்டான் துரியோதனன். கிருஷ்ணன் பார்க்காமல் விட்டு விடுவாரா என்ன?

தான் மறைந்து கொண்டால் தன்னை யாரும் காண முடியாதென்றெண்ணி தன் உருவையே மாற்றிக் கொண்டான் அரக்கனாய் இருந்த சூரபத்மன். சுய உருவைத் தவிர வேறு பலவுரு எடுத்தான்; மரமாய் நின்றான்; பிறர் தன்னைக் காண முடியாது என்று அவன் கருதிய போதும் முருகப் பெருமான் அவனைக் காணாமலா விட்டார்?



அப்படியானால்...?

அப்படியானால் - கடவுள் காண்கிறார்; எல்லாவற்றையும் காண்கிறார்; எப்போதும் காண்கிறார்; எங்கெங்கும் காண்கிறார்.

யையும் சேர்க்கும் நோக்கம்தான் 'பயபக்தி' என்று வழங்கப்பட்டதன் காரணம்.

சமயக் கொள்கைகளெல்லாம் சமுதாய நன்மைக்காகவே என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லாத சனாதன தர்மம், கடவுளின் பார்வையையே மனித வாழ்க்கையின் கண்காணிப்புப் பார்வையுமாக்கியது.

வைணவப் பெரியாரான திருக்கச்சி நம்பிகள் காஞ்சிபுரத்தில் பேரருளாளப் பெருமாளுக்குக் கைங்கர்யம் செய்து வந்தார். பெருமாளுக்கு ஆலவட்டத் தொண்டு செய்தார். ஒருநாள் இரவு நெடுநேரம் கைங்கர்யம் செய்து கொண்டிருந்த திருக்கச்சி நம்பிகள், வெளியில் இருட்டியதைக் கவனிக்கவில்லை. பக்தனின் பார்வை கவனிக்காததை பகவானின் பார்வை கண்டுவிட்டது. "இருட்டிவிட்டது அன்பனே! மடத்துக்குப் புறப்படு", என்றார் பேரருளாளன். வெளியில் வந்த திருக்கச்சி நம்பிகள், இன்னொன்றையும் காணவில்லை. வெளியே மழை பெய்து கொண்டிருந்தது. படியில் கீழிறங்கிய நம்பிகள், மழைத் துளிகள் மேலேபட்டவுடன், தன்னுடைய பணியாளனை அழைத்தார். "அருளாளா, குடை கொண்டு வா!" பணியாளன் மழை பெய்ததையும் பார்க்கவில்லை; தன் முதலாளி வந்ததையும் காணவில்லை. அவர் கூப்பிட்டதைக் கேட்கவும் இல்லை.

மானுடக் கண்கள் காணாததையும் காதுகள் கேட்காததையும், திவ்யக் கண்களும் காதுகளும் உணர்ந்துவிட்டன.

இருட்டிலும் மழையிலும் கண்களை இடுக்கிக்கொண்டு நின்ற நம்பிகளின் முன் அருளாளன் கையில் குடையுடன் வந்தான். குடையின் பாதுகாப்பில் மடத்துக்குச் சென்றார் நம்பிகள். மடத்துக்குள் நுழைந்து கொண்டே திரும்பிப் பார்த்தார். வந்த அருளாளன் மறைந்துபோனான்.

திருக்கச்சி நம்பிகள் வாழ்க்கையின் இந்த நிகழ்ச்சி ஏதோ 'அற்புதம்' இல்லை; 'அதிசயம்' இல்லை. ஆனால், கடவுளின் கண்கள் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருக்கின்றன என்பதன் அடையாளம்.

(தொடரும்)

# தாலியா? ஊச்!

மெகா தொடர்களும் சினிமாக்களும் தாலி சென்டிமெண்டில் தாய்க்குலங்களை வாட்டியெடுக்க, தாலியே கட்டாமல் வாழ்ந்து வருகிறார்கள் தொட்டியப்பட்டி கிராமத்தினர்.

கரூர் மாவட்டம், கிருஷ்ணராயபுரம் அருகே இருக்கிறது இக்கிராமம். பழையூர் மந்தை, தொட்டியப்பட்டி வடக்கு, தெற்கு என மூன்று பகுதிகளில் இருநூறு வீடுகள் இருக்கின்றன. அனைவரும் தொட்டிய நாயக்கர் இனத்தைச் சேர்ந்தவர்கள்.

"என்னமோ கதை ஒண்ணு சொல்றாங்க. தாலி இல்லாம குடும்பம் நடத்துறது எங்களுக்குத் தப்பாத் தெரியலை!" என்கின்றனர் பி. முருகேசன் – சின்னம்மா மற்றும் செல்வம் – ராமாயி தம்பதியினர்.

சரி அதென்ன கதை?

"ஒரு காலத்துல எங்க ஊர்லேந்து ஒரு நாலைஞ்சு பேர், கல்யாணத்துக்குத் திருமாங் கல்யமும் மனைப் பாயும் வாங்கியாரலாம்னு பட்டணத்துக்குப் போனாங்களாம். வாங்கிட்டு வர்ற வழியிலே ஆத்துல வெள்ளம் வர, அதுல மூழ்கி எல்லாரும் செத்துப் போயிட்டாங்களாம். அதனால நடக்க இருந்த அந்தக் கல்யாணம் மனைப்பாய் இல்லாமலும், தாலி கட்டாமலும் நடந்து அதை நம்பித்தான் நாங்களும் இப்படிச் செஞ்சுட்டு வர்றோம். எங்களோட குடும்பங்கள்ல பரம்பரையா இப்படித்தான் நடந்திட்டு வருது. தாலி இல்லேன்னாலும் ஊருக்குள்ளார ஒரு தப்புத் தண்டா யாரும் பண்ணிட முடியாது. அத்தனை ஒழுக்கமா, கட்டுப்பாடா வாழ்ந்து வறோம்.

• ராமாயி அம்மாள்

• முத்தாலம்மன் கோயில்



முடிஞ்சிடுச்சாம். அதுலேர்ந்து எங்க சாதியில் யாரும் கல்யாணத்துல தாலி கட்டிக்கிறது இல்லேன்னு சொல்றாங்க... பரம்பரையா சொல்லிட்டு வர்ற இந்தக் கதை ஒன்னு தான் எங்ககிட்ட இருக்குற ஒரே ஆதாரம்!"என்கிறார் எட்டுப் பேர்களுக்குப் பாட்டியாக வாழ்ந்து வருகிற ராமாயி அம்மாள்.

பெரும்பாலான திருமணங்களுக்குப் பொண்ணு மாப்பிள்ளைகள் இருவரும் உள்ளூரிலேயே அமைந்து விடுகின்றனர். வெளியூர் சம்பந்தம் எனில், தொட்டிய நாயக்கர் இனத்திலேயே பேசி முடிக்கின்றனர். ஒன்றிரண்டு பேர் வேறு சாதியில் காதல் திருமணம் செய்து கொண்டு வந்தால், அவர்களை ஊருக்குள் விடுவதில்லையாம்!

**ஊ**ரின் நடுவில் அமைந்திருக்கும் முத்தாலம்மன் கோயிலில்தான் இவர்களது திருமணம் நடக்குமாம். சந்நிதி வாசலில் மனைப் பாய் விரிக்காது தரையில் அமர வைக்கின்றனர் மணமக்களை. உறவுகள் திரண்டு வந்து நிற்கின்றன. கல்யாண மாலைகளை எடுத்துத் தருகிறார் பூசாரி. மணமக்கள் இருவரும் மாலைகளை மாற்றிக் கொள்கின்றனர். மஞ்சளில் தோய்த்து எடுத்த பிரி நூல் ஒன்றினை மணமகன் கையிலெடுத்து, மணமகள் கழுத்திலிருக்கும் மாலை மீது படர விடுகிறார். முடிச்சு எதுவும் போடுவதில்லை. (மாலையுடன் ஒட்டிக் கொள்ளும் இந்த மஞ்சள் நூலும், மாலையைக் கழற்றும்போது அதனுடன் இணைந்து வந்து விடுமாம்!) இதன் பின்னர் மணப் பெண்ணின் கால் விரல்களில் மறக்காமல் மெட்டியை மாட்டி விடுகிறார் மாப்பிள்ளை. கல்யாணமான பெண்கள் இந்தக் கால் மெட்டிகளைக் கடைசி வரை கழற்றி வைப்பதில்லையாம்! இவர்கள் வீட்டுத் திருமணங்களுக்குத் திருமாங்கல்யமும், மனைப் பாயும் வாங்குவது இல்லை.

"தாலி கட்டாத பழக்கம் எங்கள் இனத்தவர் எல்லோர்கிட்டயும் இருக்கு தெலுங்கு பேசி வரும் தொட்டிய நாயக்கர்கள் தமிழ் நாட்டில் நான்கு லட்சம் பேர் இருக்காங்க. இவங்க யாருமே தாலி கட்டிக்கிறதில்லை. என்னென்னமோ கதை சொன்னாலும் நாங்க எந்த ஆராய்ச்சிக்குள்ளேயும் போக விரும்பலை!'' என்கிறார் பொ.ராமன். இவர் தொட்டியப்பட்டி கிராமத்தை உள்ளடக்கிய பழைய ஜெயங்கொண்டம் பேரூராட்சியின் பதினைந்தாவது வார்டு உறுப்பினர்.

கட்டுரை, படங்கள்:
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



• பொ. ராமன்



• பி. முருகேசன் - சின்னம்மாள்

• ராமாயி - செல்வம்

என்னோட
அமைச்சர் பதவி
நிலைக்கணும்னா நான்
என்ன செய்யணும்,
சொல்லுங்க?



நீங்க எதுவுமே
செய்யாமல் இருக்கிறது
தான் உங்களுக்கும் நல்லது,
மக்களுக்கும் நல்லது!

— சீர்காழி வி. ரேவதி





"தியேட்டரைக் கல்யாண மண்டபம் ஆக்கிட்டீங்க சரி, ஏன் டிக்கெட் கவுண்டரை இடிக்காம வச்சிருக்கீங்க?"

"மொய் எழுத வசதியா இருக்கட்டுமேன்னு அப்படியே விட்டு வச்சிட்டேன்!"

— வி. சகிதா முருகன்

எங்க பொண்ணுக்குப்
பத்து பவுன் சங்கிலி போடுவோம்...
எட்டு பவுன் வளையல் போடுவோம்...
மூணு பவுன் தோடு போடுவோம்...



அவ்வளவு
தானா?

இன்னும் வேணும்னா
போலீஸ்ல சொல்லி விலங்கு
போடுவோம்...

— தஞ்சை தாமு

# மாப்பிள்ளை வீட்டார் பொறுப்பல்ல!




— எம். வினோத்



''இன்விடேஷன்ல இப்படியா அடிக்கறது?''

''என்ன?''

''மேற்படி கல்யாணம், வரதட்சணை பிரச்னை காரணமாக கடைசி நேரத்தில் நின்று போனால் மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் பொறுப்பல்ல'ன்னு அடிச்சிருக்கே.''

— எஸ். மோகன்




— தஞ்சை தாமு

# பிரபஞ்சன்

காட்சி: 36

பகல்: காவல் நிலையம்:

பாத்திரங்கள்: உதவி ஆய்வாளர், செல்வம், ஊர்ப் பெரியவர், இரண்டு காவலர். உதவி ஆய்வாளர், பெருத்த வயிறு, பெரிய மீசை, கடுமையான முகத்துடன் இருக்கிறார். இவர் வேறு மாதிரியாக இருக்க முடியாது... காட்சித் தொடக்கத்தில் உ.ஆ. ஏதோ பணியில் இருக்கிறார். நிழலாடுகிறது. நிமிர்கிறார். அவருக்கு முன் இருவரும் நிற்கிறார்கள்.

**உ.ஆ:** யார்?

**செல்வம்:** நான் செல்வம். இரவுப் பள்ளிக்கூடம் நடத்துகிறவன். இவர் பெரியசாமி. ஊர்ப் பெரியவர்.

*(உ.ஆ. அவர்களை அமரச் சொல்லவில்லை. சொல்ல மாட்டார். செல்வம், பெரியவர் இருவருமே தாமாகவே அமர்ந்து கொள்கிறார்கள்)*

என்னை வரச் சொல்லி, ஆள் அனுப்பி இருக்கீங்க...

**உ.ஆ:** உன் மேல, நிறைய 'ரிப்போர்ட்' வந்திருக்கே... ராப்பள்ளிக்கூடம்தான் நடத்தறியா. வேறு ஏதாச்சும்...

**செல்வம்:** சாரி சார்... நான் எம்.ஏ படிச்சவன். எம்.ஃபில்லும் பண்ணி இருக்கேன். எனக்கு நல்ல வேலை கிடைச்சு, நான் ரிசைன் பண்ணிட்டு வந்தவன். வேலையில் தொடர்ந்து இருந்தா, டெப்டி கலெக்டர் நாற்காலியில இருந்திருப்பேன். ஒரு செக்கு மாடா இருக்க முடியலை. அதனால, என் கருத்துப்படி வாழறேன். நான் இரவுப் பள்ளிக்கூடம், நடத்தி, பல குழந்தைகளை, தொடர்ந்து படிக்க வச்சிருக்கேன். இல்லேன்னா, பள்ளிக் கூடத்தை விட்டு நின்னு போயிருக்கும்.

**உ.ஆ:** ச்சு. நீ பொண்ணுங்களை வைச்சு 'பிசினஸ்' பண்றதா எங்களுக்கு ஊரார் தகவல் கொடுத்திருக்காங்க.

**பெரியசாமி:** அது தப்பு, சார். எனக்குத் தெரியாமே, அந்தக் குப்பத்துல எந்தத் தப்பும் நடக்க முடியாதுங்க. தம்பி, அங்க பள்ளிக்கூடம் நடத்த வந்து, அந்தப் பகுதியே மாறி இருக்குங்க. உங்ககிட்ட ரிப்போர்ட் பண்ணினவனை எனக்குத் தெரியும். அவன், அந்தப் பெரிய மனுஷனோட எடுபிடி.

**உ.ஆ:** பெரிய இவன் மாதிரி வந்து, என் கிட்டயே 'ஆர்கியூ' பண்றயா? நீயெல்லாம் ஒரு பெரிய மனுஷன். உங்கிட்ட நான் பேசணும்...?

**பெரியசாமி:** நான் பெரிய மனுஷன் தாங்க. என் வயசும், என் அனுபவமும், உழைச்சு வாழற நேர்மையும், ஒரு கால்காசு கூட எவன்கிட்டயும் கைநீட்டி லஞ்சம் வாங்காத என் சுத்தமும்தாங்க, என்னைப் பெரிய மனுஷனா ஜனங்க நினைக்கிறதுக்குக் காரணம். நான் சாதாரணமானவன் இல்லை. அதைப் புரிஞ்சுக்கணும். தாசில்தாரா இருந்து ரிடையர் ஆனவன் தான். அதோட, என் பிள்ளைகளும், சாமான்யமா இல்லைங்க... பெரிய நிலையில இருக்காங்க.

**செல்வம்:** சபாநாயகர், இவர் தம்பி. ஆனா, அதைச் சொல்லி, எதையும் சாதிக்க ஆசைப்படாதவர் இவர். நீங்க பெரிய இவனான்னு கேட்டீங்களே, ஆமான்னு சொல்லறதுக்குத்தான், பேசினேன்.

*(உ.ஆ. பெரியசாமி பக்கம் திரும்பி)*

**உ.ஆ:** சாரி சார்.. தெரியாம பேசிட்டேன்.

**பெரியசாமி:** தெரியாம, யாரும், எதையும் பேசறது இல்லை. நான் தாசில்தார் இல்லைன்னா, சபாநாயகர் அண்ணன் இல்லைன்னா, நீங்க பேச மாட்டீங்க, அப்படித்தானே?

**உ.ஆ:** சாரி. எல்லோர்கிட்டயும் பேசற மாதிரி பேசிட்டேன்.

**பெரியசாமி:** அதான் பிரச்னை. சாதாரணமா, அழுக்கு வேஷ்டி கட்டிட்டு வந்தா, அவனை இப்படிப் பேசுவீங்க. ஒழுக்கம், நாகரிகம், பண்பாடு



# ஜீவநதி




எதுவுமே உங்க தொழிலுக்கே கிடையாதா? வெட்கம், மானம் எதுவுமே இல்லியா?

*(வியர்த்துப் போகிறது உ.ஆ.க்கு. முகத்தைத் துடைத்துக் கொள்கிறார்)*

உ.ஆ: காபி சாப்பிடறீங்களா?

பெரியசாமி: வேணாம், உங்ககிட்ட காபி சாப்பிடறது. பாவம்... நான் சொல்ல வந்ததைச் சொல்றேன். செல்வம், நல்லவர். அவர் பள்ளிக்கூடம் மட்டும் தான் நடத்தறார். சட்டத்துக்குப் புறம்பா அவர் நடக்கலை. நாளைக்கு உங்க மேலதிகாரிகள்கிட்ட இதைத்தான்

பேசப் போறேன். உங்களுக்கு 'ரிப்போர்ட்' பண்ணின ஆளையும் எனக்குத் தெரியும். அவரைச் சந்திக்கிற முறையில நான் சந்திக்கத் தான் போறேன். நீங்க, சட்டம் ஒழுங்குக்குக் கட்டுப்படுங்க... பணக்காரனுக்குச் 'சலாம்' போட்டு, உங்க உத்தியோகத்தைக் கேவலப்படுத்திக்காதீங்க... செல்வம், பஞ்சாயத்துக்கு வரி கட்டித்தான், பள்ளிக்கூடம் நடத்தறார்.

*(இருவரும் எழுந்திருக்கிறார்கள். புறப்படுகிறார்கள். உ.ஆ.பயத்தோடு அவர்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.)*

காட்சி : 37

**விடியல், காலை / வீடு, தெரு**

**பாத்திரங்கள் :** *சரோஜா, வேணு, சேது*

*சரோஜா, அலாரம் சப்தம் கேட்டு எழுந்து அமர்கிறாள். படுக்கையைச் சுற்றி வைக்கிறாள்.*

**வேணுவின் குரல்:** என்னம்மா இவ்வளவு காலையில...?

**சரோஜா:** தண்ணி வர்ற நேரம். இப்ப ரெண்டு குடம் பிடிச்சி வச்சாதான்.

**வேணுவின் குரல்:** இந்த நேரத்திலயா லாரிக்காரன் வருவான்?

**சரோஜா:** எந்த நேரத்திலயும் வருவான்...

*புரண்டு படுக்கிறார் வேணு.*

*(சரோஜா, முதல்நாள் எடுத்து வைத்திருந்த ஆடை மற்றும் அவளது பொருள்களைச் சின்ன, விலை மலிவான பையில் வைக்கிறாள்.*

*குளிக்கச் செல்கிறாள். ஆடை மாற்றுகிறாள். தலை வாரிக் கொள்கிறாள். மணியைப் பார்க்கிறாள். நாலு நாற்பது. தோட்டத்துப் பக்கம் சென்று, வீட்டைச் சுற்றிக் கொண்டு தெருப்பக்கம் வருகிறாள். தெருமுனையைப் பார்க்கிறாள். ஆட்டோ, இவளை நோக்கி, இவள் திசையில் விளக்கு எரிய நிற்பது தெரிகிறது.*

*உள்ளே திரும்புகிறாள். தன் பையை எடுத்துக் கொள்கிறாள். இடுப்பில் குடம் வைப்பது மாதிரி, பையை இடுப்பில் வைத்துக் கொள்கிறாள். விளக்கை அணைத்துவிட்டு, கதவைத் திறந்து கொண்டு வெளியே வருகிறாள்.*

**வேணு:** *(படுக்கையில் இருக்கிறார்)* என்னம்மா?

**சரோஜா:** தண்ணி பிடிக்கப் போறேம்மா.

**வேணு:** சரி.

*வேணு திரும்பிப் படுக்கிறார். சரோஜா, ஆட்டோ இருக்கும் பக்கம் நோக்கி நடக்கிறாள். சேது, வெளிப்பட்டு அவள் பையை வாங்கிக் கொள்கிறான். சரோஜா, ஆட்டோவில் அமர்கிறாள். சேது, ஆட்டோவை இயக்குகிறான். சரோஜா திரும்பி, தன் வீட்டை, அப்பாவைப் பார்க்கிறாள். கண்ணீர் அரும்புகிறது அவளுக்கு. ஆட்டோ புறப்படுகிறது.*

காட்சி: 38

**விடியல் / கோயில்**

**பாத்திரங்கள்:** *கண்ணன், கீதா, சேது, சரோஜா மற்றும் சிலர்.*

*சின்ன கோயில்... கண்ணன், கீதா முதலானோர் காத்திருக்கிறார்கள். ஆட்டோ வந்து வாயிலில் நிற்கிறது. சரோஜா உள்ளே போகிறாள்.*

**கீதா:** வாங்க... இந்தப் புடைவையைக் கட்டிக்கிட்டு வாங்க...

*சரோஜா, புடைவையை எடுத்துக் கொண்டு மறைகிறாள். பிறகு புதுப் புடைவையுடன் வெளிப்படுகிறாள்.*

---

**"கட்சித் தொண்டரின் திருமணத்தில், நம்ம தலைவரை வாழ்த்துரை வழங்கச் சொன்னது ரொம்பப் பொருத்தமா யிடுச்சு.."**

**"எப்படி?"**

**"நம்ம 'கட்சியும், உட்கட்சிப் பூசலும் போல' தம்பதிகள் இணை பிரியாம வாழ ணும்னு வாழ்த்திட்டார்...!"**

**- நாமக்கல் பாலு**

---

*சேது, புது வேட்டி, சட்டையுடன் காணப்படுகிறான்.*

**புரோகிதர்:** எங்க, சரோஜாம்மா... உன் பெர்த் சர்டிபிகேட்டைக் காட்டு, நான் பார்க்கணும்...

*சரோஜா, தன் பையிலிருந்து, அதை எடுத்துக் கொடுக்கிறாள்.*

**புரோகிதர்:** சரி, சேதுவுக்கு இருபத்தியோரு வயசுக்கு மேல இருக்கும்கிறதை முட்டாள்கூட நம்புவானாக்கும்.

*திருமண மக்களை அமர வைத்து மந்திரம் சொல்லத் தொடங்குகிறார்.*

**கண்ணன்:** சாமி, அவசரம்... சீக்கிரம் முடியுங்க.

**புரோகிதர்:** சரி. மந்திரம் அரை போதும். சாஸ்திரம் வேணாம். எதுவும் வேணாம். உங்க அவசரத்துக்குப் பகவான் பணிய மாட்டார். குழந்தைக்கு அந்த ஒன்பதரை மாசம் தான்.

*சரோஜா வெட்கத்தால் சிரிக்கிறாள்.*

**கண்ணன்:** *(சேதுவைப் பார்த்து)* கேட்டுக்கடா... ஐயர் ரொம்ப முக்கியமான விஷயத்தைச் சொல்றார்.

*(எல்லோரும் சிரிக்கிறார்கள்.)* மாலை மாற்றல் நடக்கிறது. மாங்கல்யம் அணிவிக்கிறான் சேது.

**கீதா:** *(ரகசியமாக கண்ணனிடம்)* இது மட்டும் போதாது. இது அவங்க திருப்திக்கு. சட்டத்துக்கு, ரிஜிஸ்தர் கல்யாணம் பண்ணா நல்லது. பின்னால பிரச்னை இல்லாமப் போகும்.

**கண்ணன்:** அதையும் பண்ணி வைப்போம். வேற என்னத்துக்கு இந்த உடம்பு?

*திருமணம் முடிகிறது.*

*கண்ணன் புரோகிதருக்கு மரியாதை செய்கிறான்.*

**புரோகிதர்:** பணம் பெரிசில்லை. குழந்தைகள் சந்தோஷமா வாழணும். அதுதான் பெரிசு.

*(கோவிலை விட்டு வெளியே வருகிறார்கள். இலேசாக விடிந்திருக்கிறது)*

**கீதா:** இவங்களை நான் அழைச்சுக்கிட்டுப் போறேன். சரோஜா அப்பா, உங்களைத் தேடி வருவார். பிரச்னையாயிடும்.

**கண்ணன்:** சரி.

*(சேது இயக்க, சரோஜாவும் கீதாவும் அமர்ந்து கொள்ள, கீதாவின் வீட்டுக்குச் செல்கிறது ஆட்டோ.)*

காட்சி: 39

காலை / வீடு

**பாத்திரங்கள்:** *வேதகிரி, விசாலம், பெரியவர் சுமார் 55-60 வயதில். வேதகிரி பத்திரிகையில் மூழ்கி இருக்கிறார். அழைப்பு மணி ஒலி கேட்கிறது. எழுந்து போகிறார்.*

**வேதகிரி:** யார்...

**சாமிக்கண்ணு:** நான் சாமிக்கண்ணு. காஞ்சிபுரத்திலேயிருந்து வர்றேன். இங்க, வேதகிரிங்கிறது...?

**வேதகிரி:** நான்தான். உள்ளே வாங்கோ... உட்காருங்கோ... *(வந்தவர் நாற்காலியில் அமர்கிறார். ஆசுவாசம் பண்ணிக் கொள்கிறார்.)*

**சாமிக்கண்ணு:** சுவாமி, இங்க சண்முகம்கிறது...

**வேதகிரி:** என் பையன்தான்.

**சாமிக்கண்ணு:** சண்முகம் ஜாதகம் கொண்டு வந்து கொடுத்தார் தரகர். எனக்கு மூணு பெண்கள். இரண்டுக்குக் கல்யாணம் ஆச்சு. குழந்தைகள் அமோகமா இருக்கு. மூணாவதுக்குத்தான் ஜாதகம் தேடிட்டு இருந்தேன். தரகர் கொடுத்ததும், பார்த்தேன். பொருத்தம்தான். அதனால...

**வேதகிரி:** எதுக்கு, சண்முகம் ஜாதகம், உங்களண்டை?

**சாமிக்கண்ணு:** கல்யாணத்துக்குத்தான். வேற என்னத்துக்கு. என்னால முடிஞ்சதை நான் செய்வேன். நான் சுமாரான ஜீவியக்காரன். அதிகம் எதிர்பார்க்கக்கூடாது.

**வேதகிரி:** மன்னிக்கணும். ஏதோ தப்பு நடந்திருக்கு.

**சாமி:** தப்பா? என்ன சொல்றீங்க?

**வேதகிரி:** என் பையனுக்கு ஏற்கெனவே கல்யாணம் ஆகி, என் மருமக ஏதோ கோபத்துல அவங்க வீட்லே இருக்கு...

**விசாலம்:** *(கோபமாக)* அதை எதுக்குச் சொல்லணும்?

**வேதகிரி:** உன் பாவத்துல நான் பங்கெடுக்க மாட்டேன். இது உன் வேலைதானா? பாவி.

**சாமி:** என்ன சார். என்ன பிரச்னை?

**வேதகிரி:** சார்... ஒரு நல்ல பெண், எனக்கு மருமகளா வந்தது. பணத்துக்கு ஆசைப்பட்டு, இந்த ராட்சசி, அவளை நிம்மதியா வாழவிடலை. என் பையன், ரொம்பத் தாழ்வு மனப்பான்மை உள்ளவன். நல்லவன் இல்லை, இதுக்கு மேலயும், அவனுக்கு நீங்க பெண் குடுத்தா, அது உங்க விருப்பம். நான் பாவ புண்ணியத்துக்குப் பயப்படறேன்.

**சாமிக்கண்ணு:** *(எழுந்து கொள்கிறார்)* போதும். நான் வர்றேன். *(வணங்கிவிட்டுச் செல்கிறார்)*

**விசாலம்:** பிள்ளைக்கு விரோதியா இருக்கீங்களே, இது சரியா?

**வேதகிரி:** உன் பிள்ளையைப் பெரிய பாவத்திலேயிருந்து காப்பாத்தி இருக்கேன். அந்தக் காஞ்சிபுரத்துக் குழந்தையைப் பாழும் கிணற்றிலிருந்து காப்பாத்தி இருக்கேன்... போதும். பாவச் சேற்றில மூழுகாதே...

**விசாலம்:** உள்ளே போகிறார்.

*வேதகிரி சட்டையை அணிந்துகொண்டு புறப்படுகிறார்.*

(தொடரும்)

**வி**ளம்பரப் பட நிறுவனம் ஆரம்பித்திருக்கிறார் பார்த்திபன். ''ஏலேலோ' படத்திட்டம் என்ன ஆச்சுன்னு தெரியலே, 'இவன்' சொல்லிக்கிற மாதிரி போகலே; அதனால்தான் பார்த்திபன் விளம்பரப் பட லெவலுக்கு இறங்கிட்டார்'' என்ற கிசுகிசு பற்றி அவரிடமே கேட்டால், ''அந்த காசிப்பை விட்டுத் தள்ளுங்க. என்னோட விளம்பரப் பட நிறுவனத்தின் பெயரே 'காசிப்'(gossip)தான் Tell nobodyன்னு 'கேப்ஷன்' வெச்சிருக்கேன்'' என்கிறார்.

''உங்ககிட்டேயிருந்து ஐடியாக்கள் ஆர்டீசியன் ஊற்று மாதிரி வருது. நீங்க ஏன் விளம்பரத் துறையைப் புறக்கணிக்கறீங்கன்னு தொடக்கத்திலிருந்தே நண்பர்கள் சொல்லிக்கிட்டிருந்தாங்க... அதுக்குத்தான் இப்போ செயல் வடிவம் கொடுத்திருக்கேன்'' என்று அவதார விளக்கம் தந்த பார்த்திபனின் முதல் கிளையண்ட் ஹென்கோ ஸ்டெயின் சாம்பியன் டிடர்ஜண்ட் பவுடர். மிஸ்டர் ஒயிட்டாக பிரபுதேவாவையும், மிஸ் பளிச் புன்னகை வாடிக்கையாளராக சங்கவியையும் இயக்கிக் கொண்டிருந்தார்... ஹி...ஹி.. இந்த இரண்டு பேருக்குமே மார்கெட் நஹிங்கிறதைப் புரிஞ்சுக்கிட்டு விளம்பரத்துலே அமுக்கின பார்த்தி, பலே டைரக்டர்தான்!

**ந**டிகர், நடிகைகளை அதிகம் அறிமுகம் செய்வதைவிட, புதுமுக இயக்குனர்களை அறிமுகப்படுத்துவதில்தான் ஆர்.பி. சௌத்ரிக்கு ஆர்வம் அதிகம். தமது ஐம்பத்தியோராவது படமான 'தித்திக்குதே' வில் பிருந்தாசாரதியை இருபத்து ஆறாவது புதிய இயக்குனராக களமிறக்கி இருக்கிறார்!

''ஆனந்தம்' படத்திற்குத் தஞ்சை வழக்கில் வசனம் எழுதி அசத்தினாரே அவர்தான் இந்த பிருந்தா சாரதி. வசனம் மட்டும்தான் தேறுதுன்னு விமர்சனம் எழுதுகிற மாதிரி படம் எடுத்துடாதீங்க ராசா!



• 'மணிகண்டா' அர்ஜுன் - ஜோதிகா

**ஞா**யிற்றுக்கிழமை இலவச இணைப்பில், சினிமாக்காரர்களைப் பற்றி ஏகத்துக்கு விளாசும் ஒரு தினசரிப் பத்திரிகையிடம் ஒரு கோடி ரூபாய் நஷ்டஈடு கேட்டு, வக்கீல் நோட்டீஸ் அனுப்பியிருக்கிறாராம் விஜய். 'பகவதி', 'புதிய கீதை' என்று வரிசையாய்த் தோல்விப் படமாகிவிட்டதில் துவண்டு போயிருக்கும் விஜய்யைப் பற்றி உட்டாலக்கடி துக்குச் செய்தி வெளியிட்ட அந்தப் பத்திரிகை, இனி தம்மைப் பற்றியோ, தம் குடும்பத்தைப் பற்றியோ ஒரு வரிச் செய்திகூடப் போடக் கூடாதென்று இடைக்காலத் தடையையும் வாங்கி விட்டாராம்!

• 'தித்திக்குதே' ஜீவா - ஸ்ரீதேவி

**கோ**லிவுட்டின் மிகச் சிறந்த அபத்த இயக்குனர் என்ற ஆரோக்கியமான பெயரைச் சம்பாதித்துக் கொண்டிருக்கும் எஸ்.ஜே. சூர்யா, தாமே இயக்கி,

# விஜய் வாங்கிய தடை!



• 'நியூ' எஸ்.ஜே. சூர்யா





• பார்த்திபன் • விளம்பரப் படத்தில்

ஹீரோவாய் நடித்து, தமிழ் ரசிகர்களை கதிகலங்க வைக்கும் 'நியூ' படத் திட்டம் ஒருவழியாய் முடிவுக்கு வந்துவிட்டது என்கிறார்கள். படத்தோட தலைப்பை மட்டும் நியூன்னு வெச்சுட்டு, கதையை ஒல்டு ஆக்கிவிடாமல் ஒரு புதிய கதையை இந்த முறை முயற்சி செய்து இருக்கிறாராம். கதை ஓர் ஆங்கிலப்படத்திலிருந்து அமுக் கினதுன்னு கேள்விப்பட்டோமே, உண்மையா சூர்யா?

**வி**க்ரம் காட்டில் ஏகத்துக்கும் மழை பொழிவதில் ஆனானப்பட்ட ஆக்ஷன் ஹீரோ அர்ஜுனுக்குத்தான் பெரிய அடியாம்! 'பரசுராம்' பெரிய அளவில் ஹிட்டாகும் என்று எதிர்பார்த்த அவருக்கு மறுபடியும் அடி. இனி நாமும் விக்ரம் பாணியில் நிஜமாகவே ரிஸ்க் எடுக்க வேண்டும், என்ற முடிவுக்கு வந்து விட்டா ராம் அர்ஜுன். இப்படியொரு சூழ்நிலையில் 'மணிகண்டா' படப்பிடிப்புக்குச் சென்ற அர்ஜுன், பொள்ளாச்சி அருகில் உள்ள மலையடிவாரத்தில் சண்டைக் காட்சி யைப் படமாக்க கேம்ப் அடித்திருக்கிறார் கள். கேரளத்தில் பொழியும் தென்மேற்குப் பருவமழை காரணமாக, அங்கே ஐம்பது கிலோமீட்டர் வேகத்தில் திடீரென்று சூறாவளி வீசத் தொடங்க, அந்தக் காற்றி லேயே சண்டையைப் படம் பிடிக்கலாம் என்று ஸ்டண்ட் மாஸ்டர் ஜாக்குவார் தங்கத்திடம் அர்ஜுன் அடம் பிடித் திருக்கிறார். அப்புறமென்ன, இரண்டு மணி நேரம் வீசிய நிஜ சூறாவளியில் சண்டை யைப் படம் பிடித்து வந்திருக்கிறார் களாம்!

- ரவுண்ட்ஸ் பாய்

பள்ளியில் நடைபெறவிருக்கும் மாறுவேடப் போட்டிக்காக, டவுனுக்குப் போய், துணிமணிகள் எடுத்து வந்து பிள்ளைகளுக்குத் தைக்கக் கொடுக்கப் போகிற ஆவலில், நெஞ்சுக்குள் திமிறித் திளைக்கிற ஆனந்தம்.

பீரோவைத் திறந்து இருபது நூறு ரூபாய்த் தாள்களை எண்ணி பர்ஸில் திணித்துப் பூட்டிய மாணிக்கம், அதை பேண்ட் பாக்கெட்டில் வைத்துக் கொண்டான். ஒதுக்குப் புறமான அந்தப் பகுதியிலிருந்து டவுனுக்குப் போவதென்றால் சைக்கிள் ரிக்ஷாதான்.

அந்தப் பகுதியில் இரண்டு சைக்கிள் ரிக்ஷாக்கள் நிரந்தரமாக 'சவாரி'க்குக் காத்து நின்றிருக்கும். அவற்றில், சந்திரன் என்பவனின் ரிக்ஷாவில் மட்டும்தான் மாணிக்கம் பயணிப்பது வழக்கம். மற்றொருவனான தயாளனின் ரிக்ஷாவில் ஒருமுறை கூட 'சவாரி' செய்ததில்லை. அவனது மனைவி சங்கீதா இது பற்றி ஒரு நாள் காரணம் கேட்க, 'அவன் ஒரு தரித்திரம் புடிச்சவன். சோத்துக்கே லாட்டரியடிக்கிற ஆளு. இப்படியா பாதி நரைச்ச தாடி, அழுக்குச் சட்டை, லுங்கியுமா...! கொஞ்சமாச்சும் 'நீட்டா' இருக்க வேணாமா? இவன மாதிரி இருக்கிற பிரஜைகளைப் பார்த்துத் தான் வெளிநாட்டுக்காரங்க இந்தியாவ மட்டமாப் பேசுறானுங்க' என்றிருந்தான். தயாளனைப் பார்த்தாலே அருவருத்துச் சுணங்கிப் போகிறது முகம். உள்ளுக்குள் கனன்று தகிக்கும் ஆத்திரம்.

நான்காவது முறையாக வாசலுக்கு வந்து எட்டிப் பார்த்தான்.

சந்திரனின் சைக்கிள் ரிக்ஷாவைக் காணவில்லை. தெரு முனைக்குப் போய், பெட்டிக் கடையில் விசாரித்தான்.

"சந்திரனுக்கு ரெண்டு நாளா ஒடம்புக்குச் சுகமில்லியாம். வீட்ல படுத்துக்கிடக்கானாம் சார்." – அந்தப் பெட்டிக் கடைக்காரன் பதில் சொன்னான்.

மனைவியை அழைத்து, "ரிக்ஷாக்காரனுக்கு ஒடம்புக்குச் சொகமில்லியாம்... மெயின் ரோட்டுக்குப் போயி டவுன் பஸ்ல

# பிரஜை



ஏறிப் போயிறலாம், கெளம்புங்க'' என்று உத்தரவிட்டான்.

"நானா மாட்டேன்னு சொல்றேன்? நம்ப குழந்தைங்கதானே அடம் புடிக்குதுங்க. புதுத் துணிமணி எடுக்கப் போற சந்தோஷத்தக் காட்டிலும், சைக்கிள் ரிக்ஷாவுல போகப் போற உற்சாகத்துல உருகிக் கிடக்குதுங்க"என்றாள் சங்கீதா_ ஆதங்கத்துடன்.

மறு கணமே மாணிக்கத்தின் கண்கள் பிள்ளைகளின் மீது தாவின, கொத்த வரிந்து கட்டும் பருந்துப் பார்வையுடன்!

# அல்லிநகரம் தாமோதரன்

கதறியழுதுவிடுவது போலான கதியில் இருவரும் கண்களைக் கசக்கியபடி இருந்தனர்.

சட்டென வீட்டிலிருந்து வெளியேறி வீதிக்குப் போனவன், நேராகத் தெரு முனைக்கு நடந்து, ரிக்ஷாவின் சக்கரங்களைத் துடைத்துக் கொண்டிருந்த தயாளனிடம் ''யோவ்... டவுனுக்குப் போகணும் வாய்யா'' என்றான்.

மாணிக்கமும் சங்கீதாவும் அதில் ஏறி உட்கார்ந்து கொள்ள, அருணும், கவிதாவும் அவர்களது மடியில் உட்கார்ந்து கொண்டனர்.

ரிக்ஷாவை உந்தி மிதித்து ஓட்டத் துவங்கினான் ரிக்ஷாக்காரன்.

குழந்தைகள் முகத்தில் மட்டில்லா மகிழ்ச்சி. பட்டாம் பூச்சியாய்ப் பரவசச் சிறகசைப்பு. சாலையில் போய் வருகிற வாகனங்களைப் பார்த்து "ஹைய்யா..!" எனக் குதூகலம்.

தனது உடும்புப்பிடியான பிடிவாதத்தைத் தளர்த்தி, தயாளனின் ரிக்ஷாவை அழைத்து வந்த மாணிக்கத்தை பிரமிப்புடன் பார்த்தபடி பயணித்தாள் சங்கீதா.

அந்த முக்கியச் சாலையில் வேகமாய் ஓட்டிப் போன ரிக்ஷாவை சட்டென்று நிறுத்தி இறங்கினான் ரிக்ஷாக்காரன்.

''என்னாச்சுப்பா? எதுக்கு நிறுத்தின?''– கேட்டான், மாணிக்கம்.

"செயின் அறுந்து போச்சுங்க சார்... இனி வண்டிய ஓட்ட முடியாது" என்றான் அவன்.

மனைவி, குழந்தைகளுடன் கீழே இறங்கிய மாணிக்கம், ''இந்தாளு ரிக்ஷா வேணாம்னு சொன்னேனே, கேட்டீங்களா?''– என்று சங்கீதாவைப் பார்த்துப் பிளிறினான்.

இறக்கை கட்டிப் பறந்த குழந்தைகளின் மகிழ்ச்சி, சுடப்பட்டு வீழ்ந்த பறவையாய்ச் சரிந்தது.

"சார்... ஆனது ஆகிருச்சு... பாதி சார்ஜ் – அதாவது இருபது ரூபாவாவது குடுங்க"– கெஞ்சலாய்க் கேட்டான் அந்த ரிக்ஷாக்காரன்.

மாணிக்கத்தின் முகம் கடுகடுத்தது. "அதெல்லாம் அஞ்சு காசு கூடத் தர முடியாது" என்றவன் எதிரில் வந்த ஆட்டோ ஒன்றை இடை மறித்து, அதில் குடும்பத்துடன் ஏறிக் கொண்டான்.



"இரண்டு பேர் என்னை லவ் பண்றானுங்கடி...! அதுல யார்தான் அதிர்ஷ்டசாலியோ தெரியலே...!"

"இதுக்கென்ன இவ்வளவு யோசனை! ஒருத்தனை நீ கல்யாணம் பண்ணிக்கிட்டா, இன்னொருத்தன் அதிர்ஷ்டசாலி!"

– கிரிஜா மணாளன்

சிறிது நேரத்திற்கெல்லாம் அவர்கள் பயணப்பட்ட ஆட்டோ டவுனுக்குள் நுழைந்து, மேலமாசி வீதியைக் கடக்கவும், அந்தப் பிரபலமான ஜவுளிக் கடைக்கு முன், மாணிக்கத்தின் கட்டளைப்படி நிறுத்தினான் டிரைவர். ரிக்ஷாக்காரனுக்குக் கொடுப்பதற்காக, தனியாய் சட்டைப் பாக்கெட்டில் எடுத்து வைத்திருந்த நாற்பது ரூபாயில் இருபதை எடுத்து ஆட்டோக்காரனிடம் கொடுத்து விட்டு, மனைவி, குழந்தைகளுடன் ஜவுளிக் கடைக்குள் போனான்.

நிமிடப் பொழுதில் கடைச் சிப்பந்திகள் மலை போல் கொண்டு வந்து குவித்த துணி ரகங்களில், குழந்தைகளின் மாறுவேடப் போட்டிக்குத் தேவையானவற்றை மாணிக்கமும் சங்கீதாவும் தேர்வு செய்தனர்.

பின் அந்தத் துணிகள் 'பேக்கிங்' செய்யப்பட்டு கடைச் சிப்பந்தியின் மூலம் நேராகக் கல்லாவுக்குப் போயின.

பணத்தைக் கொடுத்து, அந்தத் துணிப் பொட்டலத்தினைப் பெற்றுக் கொள்வதற்காக கல்லாவுக்கருகில் போன மாணிக்கம், பர்ஸை எடுப்பதற்காக வலது பக்க பேண்ட் பாக்கெட்டில் கையை நுழைத்தான்.

அவ்வளவுதான்... குதூகலக் கொடி பறந்த நெஞ்சுக்குள் கொடூரமான இடி!

பேண்ட் பாக்கெட்டில் வைத்திருந்த இரண்டாயிரம் ரூபாயுடனான பர்ஸைக் காணவில்லை. மனைவியிடம் விஷயத்தைச் சொல்ல, அவளும் அதிர்ந்து போய் நின்றாள்.

பின், ஒருவாறு தனக்குள் சமாதானம் செய்து கொண்டபடி இயல்பு நிலைக்கு வந்த மாணிக்கம், நடந்த விவரங்களை ஜவுளிக் கடையின் கல்லாவில் உட்கார்ந்திருந்த ஆளிடம் சொல்வதற்கு ஆயத்தமாக –

'சார்...!'– கடையின் வாயிலிலிருந்து காதைக் கிழிக்கிற கூக்குரல். திரும்பிப் பார்த்தான் மாணிக்கம். சைக்கிள் ரிக்ஷாக்காரன் தயாளன்!

"சார்... இதோ உங்க பர்ஸ்" என்றவாறு கடைக்குள் ஓடி வந்து அவனது அருகில் நின்று, தனது கையிலிருந்த பர்ஸை அவனது கையில் திணித்தான்.

"ரிக்ஷாவுல வுட்டுட்டுப் போயிட்டீங்க சார். நீங்களும் அம்மாவும் இந்த ஜவுளிக் கடைக்குத்தான் வந்து குழந்தைங்களுக்குப் பாரதியார், காந்தி வேஷத்துக்குத் துணிங்க எடுக்கணும்னு பேசிட்டிருந்ததை ஞாபகம் வெச்சுதான் சட்டுன்னு டவுன் பஸ் ஏறி இங்க ஓடியாந்தேன்" என்றான் மகிழ்ச்சிக் கூத்தாடலில்.

உடனே பர்ஸிலிருந்து நூறு ரூபாய்த் தாள் ஒன்றை எடுத்து அதை அவனிடம் தந்து "வெச்சுக்கோப்பா" என்று மாணிக்கம் சொல்ல,

"ம்...ஹூம். வேண்டாங்க சார்... எனக்குத்தர வேண்டிய பாதி சார்ஜ் இருபது ரூபாய் மட்டும் குடுங்க, போதும்" என மறுத்தான் அந்தப் பிரஜை. ○

# நீங்களும் மகிழ்ச்சியாக வாழலாம்!



லக்ஷ்மி நாராயணன்

மகிழ்ச்சியான வாழ்வு அமைய வேண்டும் என்று தான் எல்லோரும் விரும்புவார்கள். அப்படி வாழ வழி தெரியாமல் தவித்துக்கொண்டிருக்கும் பல சகோதர, சகோதரிகளுக்கும் ஒரு நற்செய்தி! ஆர்வத்துடன் முயன்றால் நீங்களும் நிச்சயம் மகிழ்ச்சியும், நிம்மதியும் பெற சில வழிமுறைகள் இதோ:

ஒவ்வொரு மாதமும் முதல் வார சனி, ஞாயிறு இரண்டு நாள் நடக்கும் ரேய்கி I & II நிலை வகுப்பில் கலந்து கொண்டு தன்னம்பிக்கையும், உடல், மன ஆரோக்கியமும் பெற்று, பயம், கோபம், தூக்கமின்மை, அலுப்பு, மனச் சோர்வு போன்றவைகளும் நீங்கி மகிழ்ச்சியாக வாழ ஆரம்பியுங்கள்! கட்டணம் ரூ.1600/- மட்டுமே. சாதாரண மாக படித்த ஆண்களும், பெண்களும் கூட சுலபமாக புரிந்து கொள்ளும் விதத்தில் அனைத்து பயிற்சி பாடங் களும் கற்றுத் தரப்படுகிறது (தமிழிலும் விளக்கம் உண்டு). தகுதியானவர்களுக்கு ரேய்கி III A மற்றும் மாஸ்டர்ஷிப் பயிற்சியும் பின்னர் அளிக்கப்படும்.

ஏற்கெனவே ரேய்கி I & II கற்றவர்களானால் மேலும் பல சக்தி வாய்ந்த சிகிச்சை முறைகளை கற்றுக் கொள்ள வசதியாக நிறைய பயிற்சிகளும் இங்கு உண்டு.

**• KARUNA REIKI • MAGNIFIED HEALING**
**• PLATINUM RAY HEALING**
**• THE MELCHIZEDEK METHOD OF HEALING**
**• EGYPTIAN CARTOUCHE • PENDULUM DOWSING • TAROT CARDS READING • FENGSHUI**
முதலியனவும் கற்றுத் தரப்படுகிறது.

நம்மால் இந்த முறைகளை எல்லாம் கற்றுக் கொள்ள முடியுமா என்று எந்த பயமும் வேண்டாம். படித்துக் கொண்டிருக்கும் மாணவர்களிலிருந்து, இல்லத்தரசிகள், கலைஞர்கள், வியாபாரிகள், அலுவலக பணியிலிருப்பவர் கள் என்று எல்லா தரப்பினருக்கும் தேவையான பயன் களை ஏற்படுத்திக் கொள்ளும் வகையில் இந்த பாட முறைகள் குறுகிய நாட்களில் விளக்கப்படுகிறது.

பிரபலமான பல அயல்நாட்டு மாஸ்டர்களிடம் நேரிடை பயிற்சி எடுத்திருக்கும் இவரை அணுகி பயிற்சி வகுப்புகள் பற்றி மேலும் விவரங்கள் அறியலாம்.

**Mrs. LAKSHMI NARAAYANAN**
**(Reiki & Kamadon Master)**
**37/1, Second Main Road, Kalaimagal Nagar, Ekkaduthangal, (Near 100ft Road) Ashok Nagar, Chennai - 600 097.**
**Ph : 044 - 22323066.**
**E-mail:lakshmi_reiki@yahoo.com**

**சர்வே ஜனா சுகினோ பவந்து**

# SEA BRREEZE HOME FOR AGED

தூய்மை, பசுமை கொண்ட மேட்டுக்குப்பம் பகுதியில் குறைந்த மாதக் கட்டணத்தில் சைவ உணவு, மருத்துவ உதவியாளர், வாகனப் பொழுதுபோக்கு வசதிகளோடு முதியோர் இல்லம்.

**மாதக் கட்டணம், வருடக் கட்டணம், ஆயுள் கட்டணம்.**

தனிநபர், தம்பதியர், தனி அறை, பொது அறை வசதிகள் உண்டு.

எங்கள் முதியோர் இல்லத்தில் நடமாட முடியாதவர்களையும் சேர்த் துப் பராமரிக்கிறோம்.

பணிக்குச் செல்வோர் தங்கள் இல்லங்களிலுள்ள முதியோர்களைக் கவனிக்க வாய்ப்பு இல்லையே என்று கவலைப்பட வேண்டாம். உங்களுக் கான பொறுப்பை நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம். எங்களது வாகனத்தில் அழைத்து வந்து மாலையில் இல்லங் களில் பத்திரமாக ஒப்படைக்கும் சேவையை வழங்குகிறோம்.

## பாத்திமா உழைக்கும் மகளிர் விடுதி

உழைக்கும் மகளிரின் வசதிக்காக தனித்தனி அறைகளும், பொது அறை களும் பாதுகாப்பான சூழ்நிலையில் கிடைக்கும்.

**ஸீ ப்ரீஸ் முதியோர் இல்லம்**
பாத்திமா டிரஸ்டு (பதிவு)
3/251 வி.பி.ஜி. அவென்யூ,
மேட்டுக்குப்பம், துரைப்பாக்கம்,
பழைய மகாபலிபுரம் சாலை,
சென்னை - 96.
**Ph : 24963949 Cell : 98412-97887**

**மானுட சேவைக்குப் பேதமில்லை**

# அழகான தமிழ்...?

சன் டிவியில் மூன்று நிகழ்ச்சிகளைக் குத்தகைக்கு எடுத்திருக்கும் சாத்திமா ஹனிடெவ் எக்கச்சக்க சந்தோஷத்தில் இருக்கிறார். "டி.வியில பண்ற காம்ப்யரிங்கைப் பார்த்து ஸ்டேஜ்ல நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்க எனக்கு ஏகப்பட்ட அழைப்பு. தமிழ்நாட்டுல மட்டுமில்லே - மலேஷியா, சிங்கப்பூர்லேருந்துகூட அழைப்பு. எல்லா இடமும் சுத்தி வந்துட்டேன். கிட்டத்தட்ட எண்பது ஸ்டேஜ் நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கியிருக்கேன். இன்னும் மூணு நாலு மாசத்துல செஞ்சுரி போட்டுவேன்" என்றவர், "சினிமாவுல நடிக்க வர்றீங்களான்னு 'பெப்ஸி' இயக்குனர் ஜீவா சார் கூப்பிட்டார். நோ சொல்லிட்டேன்" என்கிறார். இவர் 'நோ' சொல்ல என்ன காரணமாம்?

"வீட்ல ஒத்துக்க மாட்டேங்கறாங்கப்பா!"

• ஐஸ்வர்யா

'மெட்டி ஒலி'யில் அல்டாப் மாப்பிள்ளையாக வந்து அலட்டல் பண்ணும் திருச்செல்வம், அடிப்படையில் சவுண்ட் என்ஜினியர். இளையராஜாவிடம் 'சேது' படம் வரை ஒர்க் பண்ணியவர்.

"இயக்குனர் திருமுருகன் என்னுடைய நண்பர். பிலிம் இன்ஸ்டிடியூட்டில் ஒண்ணாப் படிச்சோம். 'காவேரி' தொடர் பண்ணும்போது சேர்ந்து பண்ணலாமேன்னார். இப்ப 'மெட்டி ஒலி'க்கும் இணை இயக்குனரா தொடர்ந்துகிட்டிருக்கேன்" என்கிற திருச்செல்வம், பாலுமகேந்திரா, மகேந்திரன் போன்ற இயக்குனர்களின் ரசிகர்.

"ஆயிரம் டப்பாங்கூத்துப் படங்கள் வந்தாலும் நல்ல சினிமாவை மக்கள் ஏத்துக்காம இருந்ததில்லை. அப்படியொரு சினிமாவை நிச்சயம் தமிழ்ல இயக்குவேன். அதுதான் இலட்சியம்" என்கிறார்.



• திருச்செல்வம்

'சலனம்' தொடரின் நாயகி சாலினி தமிழச்சிதான் என்றாலும் கேரளாவிலிருந்துதான் கண்டுபிடித்து வந்திருக்கிறார்கள். மலையாளத்தில் 'ஸ்திரீ' தொடரில் கலக்கிய இவரை, தமிழுக்கு இழுத்து வந்த இயக்குனர் கவிதா பாரதி, நாயகனையும் கேரளாவிலிருந்தே கொண்டு வந்திருக்கிறார். அடூர் கோபாலகிருஷ்ணன், பரதன் போன்ற பெரிய இயக்குனர்களின் படங்களில் நடித்து, மோதிரக் கையால் குட்டுப் பட்டவராம் இந்த ஹீரோ.

'கதை ஏதோ விவகாரமானதுன்னு பேசிக்கிறாங்களே' என்று கவிதா பாரதியைக் கேட்டால் "நடக்கற கதைதான். புதுசா உற்பத்தியா பண்ண முடியும்? கும்பகோணத்துல இருக்கிற ஒரு குடும்பத்துல கதை ஆரம்பமாகுது. அக்கா மாப்பிள்ளை, மச்சினிச்சி மேல கண் வைக்கிறார். இதனால ஏற்படற சிக்கல்கள்தான் கதை" என்கிறார்.

"கோபி செட்டிப்பாளையம் பக்கத்திலே மும்தாஜ் நடிச்ச ஒரு படத்தோட



* சாத்திமா

ஷூட்டிங். 'ஷூட்டிங் ஸ்பாட்' நிகழ்ச்சிக்காக நான் அங்க போயிருந்தேன். கிராமத்து மக்களெல்லாம் மும்தாஜை விட்டுட்டு நேரா என்னைச் சுத்தி வந்துட்டாங்க. எனக்கு ரொம்ப வெட்கமாப் போச்சு. "மும்தாஜுக்கு இன்னும் மூன்று நான் ஷூட்டிங் இருக்கு. நாளைக்குக்கூட அவங்களைப் பார்க்கலாம். உங்களை இப்பத்தான பார்க்க முடியும்'னு பயங்கரமா கலாய்ச்சிட்டாங்க. எனக்கு இவ்வளவு வரவேற்பா?ன்னு ஆடிப் போய்ட்டேன். மீடியாவோட சக்தியை அப்பதான் புரிஞ்சிக்கிட்டேன்."

இப்படி நெகிழ்ந்து போகிறவர் ஜெயா டி.வியின் 'காமெடி பஜாரில்' கலக்கும் ஜேக்கப். இவருடன் இணைந்து கலாட்டா பண்ணும் மாறனுக்கு என்ன அனுபவமோ? பார்ட்டி அகப்படவில்லை.



* கவிதா பாரதி

'ஏப்ரல் மாதத்'தில் படத்தில் ஸ்நேகாவுக்குத் தோழியாக நடித்த ஐஸ்வர்யா இப்போது 'அண்ணாமலை', 'அவர்கள்', 'மாங்கல்யம்', 'சாரதா' என்று டி.வி சீரியல்களில் பிஸி.

"நாலு தொடர்கள்லயும் வெவ்வேறு கேரக்டர்கள். ரொம்ப சவாலா இருக்கு. காலைல 'சாரதா'வுல காமெடி பண்ணிட்டு வந்தா, 'அண்ணாமலை'ல போதை மருந்துக்கு அடிமையான பொண்ணா நடிக்கணும். மாங்கல்யத்துல அமைதியான பொண்ணு கேரக்டர். ஒரே நாளுல எவ்வளவு வேஷம் போட வேண்டியிருக்கு பாத்தீங்களா?" என்கிறார்.

* ஜேக்கப்

அழகான காம்பியர்களை வளைத்துப் போட, சென்னையிலுள்ள அனைத்துக் கல்லூரிகளுக்கும் ஜெயா டி.வி சர்க்குலர் அனுப்பியிருக்கிறது. 'நான், நீ' என்று மாணவிகள் போட்டி போடுகிறார்களாம்! அழகான முகங்கள் சரி... அழகான தமிழ்...?

— ஏக்ஜி



* 'சலனத்தில் சாலினி

மயிலாப்பூர் தெப்பக்குளத்தையொட்டிய ராக்கியப்பன் தெருவுக்குள் நுழைந்து, சங்கரின் வீட்டைத் தேடிய போது, கதவில் கனமான பூட்டு. "சங்கர் இறந்த பிறகு சம்சாரமும், பிள்ளைகளும் வீட்டைக் காலி பண்ணிட்டுச் சொந்த ஊருக்கே போயிட்டாங்க. இங்கே இருந்தால் எப்படிச் சாப்பிடுறது? வாடகை கொடுக்கிறது?" சோகமாய்ச் சொன்ன பக்கத்து வீட்டுத் தாத்தா, நம்மைப் பார்த்து, "நீங்க அவருக்கு உறவா?" என்றார். பிறகு நம் பதிலுக்குக் காத்திராமல், "விலாசம் வேணுமின்னா பிள்ளையார் கோவில் தெருவுக்குப் போய் குமார் ஆசாரியைப் பாருங்க" என்று வழிகாட்டி விட்டுப் போனார்.



• ரவீந்திரன்



• குமார்

"ஓரிஸ்ஸா பட்டினிச் சாவைப் பத்தி உலகமே பேசியது. தஞ்சாவூர் விவசாயத் தொழிலாளிங்க வேலையில்லாமல் பட்டினியாலே செத்தப்போ, டி.வியிலே காட்டினாங்க. தினசரி பத்து, இருபது கூட கிடைக்காமல் பல லட்சம் பத்தர் குடும்பங்க (தங்க நகைத் தொழிலாளர்) பட்டினியில் வாடுறதைப் பற்றி எந்தப் பத்திரிகையிலும் போட மாட்டேன் கிறாங்க" என்று வருத்தப்படும் குமார் முப்பது வயது இளைஞர். காரைக்குடிதான் இவருக்குச் சொந்த ஊர். ஐந்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த குமாரை, அவரது தந்தை நாகு ஆசாரி, பட்டறையில் பிடித்துப் போட, பதிமூன்று வயது முதலே தங்க நகைத் தொழிலாளி ஆகிவிட்டார் குமார்.

காரைக்குடி, மதுரை நகர்களில் உள்ள நகைக் கடைகளுக்கு முழுவதும் – கை வேலைப்பாடு மூலம் தங்க நகைகளைச் செய்து கொடுத்துக் கொண்டிருந்த குமாரின் குடும்பம், தொண்ணூறுகளுக்குப் பிறகு தடுமாற ஆரம்பித்தது. குமாரின் தந்தை தங்க



• சந்திரசேகர்

# மரணப்பிடியில் நகைத் தொழிலாளர்கள்!

நகையை விட்டுவிட்டு தச்சு வேலைக்குப் போக ஆரம்பித்தார். நகைக் கடைகளிலிருந்து தொடர்ந்து கிடைத்து வந்த வேலை, மெல்ல மெல்லக் குறைந்தது. ஒரு கட்டத்தில் முற்றிலுமாக நின்று போனது. காரணம், சின்னச் சின்ன நகைக் கடைகள் கூட முழுவதும் இயந்திரங்களால் தயாரிக்கப்பட்ட ரெடிமேட் நகைகளை, கோவை, கொல்கத்தா, மும்பை நகர்களிலிருந்து சுலபமாய்த் தருவித்துக் கொள்ள... வயிற்றுப் பாட்டில் அடி. இனியும் காரைக்குடியிலிருந்தால் கவைக்கு உதவாது என்று முடிவு செய்த குமார், உறவுக்காரர்களிடம் ஐம்பத்தையாயிரம் ரூபாய் கடன் வாங்கி வெளிநாடு செல்லும் முயற்சியில் இறங்கியிருக்கிறார். ஒரு வழியாய் ஏஜெண்டிடமிருந்து தகவல், வர, நம்பிக்கையோடு சென்னை வந்தவருக்கு பெரிய இடி. ஏஜெண்ட் பணத்தோடு எஸ்கேப் ஆகிவிட, உறைந்து போன குமார் ஊர் திரும்ப பயந்து, மயிலாப்பூரில் இருந்த தங்க நகைத் தொழிலாளர்களிடம் அடைக்கலம் புகுந்திருக்கிறார். "கடந்த ஐந்து வருடமாக காரைக்குடியை மறந்தே விட்டேன்" என்கிறார்.

தங்கநகைத் தொழிலைத்தவிர வேறு எதுவும் தெரியாத சங்கர், வேலையின்

மையால் தற்கொலை செய்து கொண்டார் என்றால், இருபத்தைந்து வருட அனுபவம் கொண்ட பொற்கொல்லரான மதனகோபால், மைலாப்பூரில் சைக்கிள் ரிக்ஷா ஓட்டிப் பிழைக்கிறார். "வேறு தொழிலுக்குப் போக மனமில்லாத என்னைப் போன்ற வயது முதிர்ந்த ஆசாரிகள், பாலீஷ் செய்து கொடுத்தல், நகைகளைப் பழுது நீக்கித் தருதல் போன்ற சில்லறை வேலைகளைச் செய்து வயிற்றைக் கழுவி வருகிறோம்" என்கிறார் அறுபதுவயது வேணு.



• வேணு

• "பாலீஷ் போட்டுப் பிழைப்பு நடத்துறோம்"

"முழுவதும் இயந்திரங்கள் செய்யப்படும் நகைகளில் கூட சிறு சிறு கைவேலைகள் அவசியம் என்பதால், பெரிய நகைக் கடைகளில் ஆசாரிகளில் கொஞ்ச பேருக்கு தினசரி அறுபது ரூபாய் முதல் நூறு ரூபாய் வரை கூலி கொடுத்து, தினசரி பதினாறு மணி நேரம் வேலை வாங்கி, கொத்தடிமை போல வைத்திருக்கிறார்கள்" எனும் சந்திரசேகர், "பொற்கொல்லர்களின் இந்தச் சோகம் மைலாப்பூரில்தான் என்றில்லை. வேறு தொழில் எதுவும் தெரியாத இரண்டு லட்சம் நகைத் தொழிலாளர் வசிக்கும் கோவையில் மட்டும் கடந்த பத்தாண்டுகளில் இருநூறு குடும்பங்கள் தற்கொலை செய்து கொண்டிருக்கின்றன" என்கிறார். "அத்தனை பேரின் சாவுக்கும் கடனும், வறுமையும் வேலையின்மையும்தான் காரணம் என்பதற்குப் போலீஸ் ரெக்கார்டுகளே ஆதாரம். ஆனால் அரசாங்கம் ஒரு சிறு துரும்பைக் கூட நகர்த்திப் போடவில்லை" என்கிறார்.

ரெடிமேட் நகைகளுக்கு அதிக மவுசு வரக் காரணம் மக்களா, நகைக் கடைக்காரர்களா என்றால், "அவசர யுகத்தில் மக்கள் எதற்காகவும் காத்திருக்க விரும்புவதில்லை. முன்பெல்லாம் மாங்கல்யம், மெட்டி, கொலுசுகளை ஆசாரியிடம் கொடுத்துதான் செய்து அணிவார்கள். இப்போது அவற்றையும் ரெடிமேடாக வாங்கிக் கொள்ளும் மனநிலைக்கு வந்துவிட்டார்கள்" என்றார் சென்னை தி.நகர் உஸ்மான் சாலையில் உள்ள பி.ஆர்.ஜுவல்லரியின் உரிமையாளர் ரவீந்திரன்.

ஒரு பொற்கொல்லர் அதிகபட்சமாக ஒரு ஜோடி கம்மல் தான் செய்ய முடிகிறது. இயந்திரத்தின் வேகத்தோடு நகைத் தொழிலாளி போட்டி போட முடியாது என்ற நிலையில், இவர்களின் வாழ்க்கைக்குத் தீர்வுதான் என்ன?

"1963-ல் தங்க நகைத் தொழிலாளர்களுக்கு அரசால் அங்கீகரிக்கப்பட்ட பொற்கொல்லர் என்று உரிமம் கொடுத்தார்கள். இதைக் கடையில் மாட்டினால் மக்கள் நம்பிக்கையோடு வந்து வேலை கொடுப்பார்கள். 1985-ல் இந்த உரிமங்களை இரத்து செய்து விட்டார்கள். இதைத் திரும்பவும் வழங்க வேண்டும். அல்லது நாங்கள் மாற்றுத் தொழில் செய்ய, குறைந்தபட்சக் கடனுதவியாவது வழங்க வேண்டும். உண்ணாவிரதப் போராட்டமெல்லாம் நடத்தி, நாங்கள் சாகவேண்டியதில்லை. பட்டினியே எங்களைக் கொன்றுவிடும்" என்கிறார் குமார் வேதனையோடு.

— ஜெயந்தன்

படங்கள்: டஜிட்டல் சண்முகம்

வேலையிலிருந்து, வீடு திரும்பிய போது, படிகளின் ஓரத்தில் உட்கார்ந்திருந்த அது என் பார்வையை இடறியது.

கறுப்பு பாலிதின் உறைக்குள் திணிக்கப் பட்டு, மண்ணிலிருந்து ஜாண் உயரத்துக் குச் செருகி வைக்கப்பட்டிருந்த ரோஜாக் குச்சி ஒன்றிரண்டு துளிருடன் காணப்பட் டது.

ஜானகியோட வேலையாக இருக் குமோ...?

இந்த மாதிரி குழந்தைத்தனமெல்லாம் அவள்தான் செய்வாள்.

முப்பது வயதாகியும் இன்னும் சிறு பிள்ளை நினைப்பு.

வீட்டுச் செலவுக்குக் கொடுக்கும் காசெல்லாம், ஹேப்பிமேன், பப்பி ஹவுஸ், கிளிஞ்சல் பொம்மைகள், பிளாஸ்டிக் கடவுள்கள், கொலுப்படி வைக்கிறவள் போல தினுசு தினுசாய் வாங்கிக் குவித்து விடுவாள்.

ஒன்றினாலும் ஒரு பிரயோசனம் உண்டா? அவசரத்துக் குத் தின்ன முடி யுமா, அவ சியத்துக்கு விற்க முடியுமா?

"காசை வீணடிக்கறயே! சேர்த்து வச்சு உருப்படியா வீட்டுக்குத் தேவையான பொருள் ஏதாவது வாங்கலாமில்ல. சொப்புகளை வைச்சு விளையாட பொண் குழந்தையா பொறந்திருக்கு. எதுக்கு வாங்கிக் குவிக்கற...?" என்று கேட்டால்,

"நானா பெண் குழந்தை பெத்துக்க மாட்டேங்கறேன். நீங்கதானே இரண்டு பிள்ளையே போதும்னுட்டீங்க..." என்பாள்.

அழுவதா சிரிப்பதா தெரியாது.

இவள் வாங்கி வைத்திருக்கிற சொப்பு களை வைத்து விளையாட பெண் குழந்தை பெற்றுக் கொள்வது என்பது, சமயத்தில் ஒரு ஜாக்கெட் பிட்டை வாங்கி, இதற்கு மேட் சாக ஒரு புடைவை எடுத்துக் கொடு என்று கேட்பாளே... அதுபோன்ற சமாசாரமா? நாலாயிரத்து சொச்சம் வருமானத்துக்கு இரண்டு பிள்ளைகளே அதிகம்.

"என்ன அங்கயே நிக்கறீங்க...?"

ஜானகி மேலிருந்து கொண்டு கேட்டாள்.

"இதென்ன?"

"ரோஜாச் செடி..."

"வாங்கினியா...?"

"நம்மது இல்லே! ராதா வாங்கியிருக்கா..."

ராதா மூன்றாவது போர்ஷனில் குடியிருக்கும் போஸ்ட்மேன் மகள்.

"அவங்க எதுக்கு, இங்க வைக்கணும்...?" என்று கேட்டவாறே படியேறினேன்.

"நல்ல கதையாயிருக்கே. மாடிப்படி நமக்குச் சொந்தமா!



# பூ வாசம்

ஜாஸ்



ஏதோ வாங்கிட்டு வந்து அவசரத்துக்கு அங்கே வைச்சுட்டாள். நாம வாங்கியிருந்தாலும் அங்கேதானே வைச்சிருப்பம்..."

"தலைல வைச்சிருப்பம். சொந்த பங்களா பாரு... நாலு பக்கமும் செடி வளர்த்து அழகு பார்க்கலாம்..."

வாசலில் செருப்பு உதறி, உள்ளே நுழைந்தேன்.

"சரிதான் சொந்த வீடு உள்ளவங்கதான் சமைக்கணும், சாப்பிடணும், உடுத்தணும், படுக்கணும்னு சொல்விங்க போலிருக்கு. வாடகைக்கு இருக்கிறவங்க செடி கொடி வளர்க்கக் கூடாதுன்னு இருக்கா! வாடகை வீட்ல ஆணியடிச்சு சாமி படம் மாட்டறோம். ஒரு பூச்செடி வளர்க்கக் கூடாதா?"

"ஏதேது... எவனோ வாங்கின பூச்செடிக்கு இத்தனை வக்காலத்து. உண்மையைச் சொல் நீ வாங்கினியா...?"

"ஒரு செடி பதினைஞ்சு ரூபா. இரண்டு செடி முப்பது ரூபா. அவ்வளவு காசுக்கு நான் எங்கே போவேன். அது மட்டுமா, தொட்டி, எருவு, மண் வாங்க மேலும் நாப்பது ரூபா

பருதலம் சுகுமாரன்





## உருப்படியாய் ஒரு துணுக்கு!

நாம் குழந்தைகளை 'உருப்பட மாட்டாய்' என்று திட்டுவதை வழக்கத்தில் வைத்துக் கொண்டிருக்கிறோம்.

இது எப்படி பேச்சு வழக்கில் தோன்றியது? அந்தக் காலத்தில் பகவானுடைய தியானத்தைச் சொல்லிக் கொடுக்கும் ஆச்சாரியன், சீடனைப் பார்த்து, ''உன்னுடைய புத்தியில் இவ்வளவு சலனம் இருக்குமானால் பகவானுடைய உரு உன் மனத்தில் படாது'' என்று கூறியதுதான் சுருங்கி 'உருப்படாது' என்று வந்துவிட்டது போலும்!

- குருஜி முரளிதர ஸ்வாமிகள் கூறியது.

தகவல்: கூந்தலூர் ஜெயராமன்

யாகும்.

ஆக மொத்தம் எழுபது ரூபாய். நான்தான் வாங்கிடுவேன், நீங்களும் சந்தோஷமா விட்ருவிங்க'' என்று கழுத்தை வளைத்து மோவாயைத் தோளில் இடித்து, ஒரு 'உக்கும்' கொட்டிவிட்டு சமையலறைக்குப் போனாள்.

அந்தப் பேச்சு அத்துடன் நின்றது.

விளையாடப் போன குழந்தைகள் வந்துவிட, பேச்சு திசை திரும்பியது.

இரண்டு நாட்களாகப் படியோரம் தவமிருந்த செடிகள், மூன்றாம் நாள் தலா ஒரு தொட்டிக்குள் ஐக்யமாகி, எங்கள் போர்ஷன் வராந்தாவுக்கு வந்துவிட்டன.

"அவதாங்க கொண்டு வந்து வைச்சா, செடி வளரணும்னா நல்லா வெயில்படற இடமாய் வைக்கணுமாம். நீங்கதான் பார்த்திருப்பிங்களே... அவ போர்ஷன்ல துளி வெளிச்சமில்லை. அமாவாசை இருட்டு. புழு பூச்சி வளரும். பூச்செடி வளருமா? துளிர்க்கிற வரை இங்க இருக்கட்டும்னாள். வேணாம்னு சொல்ல மனசு வரலை..." என்றாள்.

அதற்குமேல் கேள்விக்கு இடமில்லை.

ஆனால், தினமும் அவள் கர்மசிரத்தையாய்ப் பூச்செடிகளைப் பராமரித்து வருகிறாள் என்பது கண்கூடு.

சமையலின்போது விழும் வெங்காயச் சருகு, பூண்டு சருகு, காரட்டை சீவியெடுத்த தோல், டிகாக்ஷன் இறக்கிய சக்கை என்று ஏதேனும் போட்டுக் கொண்டிருந்தாள் செடிகளுக்கு.

"இன்னைக்கு இந்தச் செடி துளிர்த்திருக்கு... அந்தச் செடி பெருசா இரண்டு இலையே விட்டிருக்கு... முள்ளு இலைக்கு முன்னயே வந்துடுத்து... இன்னைக்கு இலை வந்துடுத்து... இன்னைக்கு இலையில ஒரு புழு வெட்டு. பதறிப் போய்ட்டேன். உடனே அந்த இலையைக் கிள்ளி எறிஞ்சுட்டேன். விட்டால் எல்லா இலைக்கும் பரவி நாசமாயிரும்..."

"என்று தினமும் செடி புராணம் படித்தாள்.

"ரொம்ப அஃபெக்ஷன் வைக்காதடி. லொடக்குன்னு ராதா வந்து செடியைத் தூக்கிட்டுப் போய்ட்டாள்னா கஷ்டமாயிடும். செடிய வளர்க்கறயா பிள்ளைய வளர்க்கறயா? எனக்கென்னமோ பழைய படத்துல பானுமதி பாடின 'பூவாகி காயாகி கனிந்த மரம் ஒன்று...' பாட்டு நினைப்புக்கு வருது. அவள் வாங்கினாளாம். இவள் வளர்க்கறாளாம். செடிக்குச் சொந்தக்காரி ஒருமுறை கூட இங்க வந்து பார்த்து, நான் பார்க்கலை..."

"அவ இருபத்து நாலு மணி நேரமும் வந்து காவலிருப்பாளா! காலைல ஒரு தரம், சாயங்காலம் ஒரு தரம் வந்துட்டுப் போறா? அத்தாட்சிக்குக் கையெழுத்தா வாங்கி வைக்க முடியும்" என்றாள்.

சாண் உயரமிருந்தது, முழமாகி, நாலு கிளை பிரிந்து, தலா இரண்டு மொட்டும் விட்டது.

ஒருநாள் காலையில், புத்தம் புதுசாக மலர்ந்திருந்த ரோஜாக்களைப் பார்க்க... எனக்கே சற்று பரவசமாயிருந்தது.

சேர்ந்தாற்போல நான்கு பூக்கள்.

மனிதனுக்கு அன்பையும், மென்மையையும் சொல்லிக் கொடுக்க வந்த குருமார்களைப் போல,

அந்தப் பூக்கள் என்னை சினேகமாய்ப் பார்த்தன.

ஜானகியிடம் சொன்னேன்.

"நீயும் ரெண்டு செடி வாங்கி வை" என்று.

குறுஞ்சிரிப்புடன் அவள் சொன்னாள்:

"இதுவே நம்ம செடிதாங்க."




• கி.ரா.வுடன் மது



• மது தியாகராஜன்

# பாலிவுட்டாகும் பாண்டிச்சேரி?

"பாண்டிச்சேரியை இன்னொரு பாலிவுட்டாக மாற்றாமல் விடப் போவதில்லை; எனது 'கோமதி' இதை சாத்தியமாக்குவாள்'' என்கிறார் இயக்குனர் மது தியாகராஜன்.

அது சரி, யாரிந்த கோமதி? புதிய சினிமா தயாரிப்பாளரா என்றால், கி.ரா.வின் கதாநாயகி என்கிறார்.

கி.ரா.வின் 'கரிசல் காட்டுக் கடுதாசிகள்' தொகுப்பில் இடம் பெற்றுள்ள ஒரு சிறு கதையைத்தான் 'கோமதி' என்ற தலைப்புடன் திரைப்படமாக்க வந்திருக்கிறார் மது.

பெரும்பாலும் புதிய கலைஞர்களின் ஒத்துழைப்பில் உருவாகிறது இப்படம்.

"இதற்காக என் இருபத்தாறு வருட ஹாலிவுட் திரைப்பட அனுபவத்தைப் பயன் படுத்த இருக்கிறேன்'' என்கிறார்.

இவருக்கும் ஹாலிவுட்டிற்கும் என்ன தொடர்பு?

மது தியாகராஜனுக்குப் பூர்வீகம் பாண்டிச்சேரி அருகில் இருக்கும் வண்டிப் பாளையம் எனும் குக்கிராமம். மேற்கு ஜெர்மனியில் செய்ஜென் பல்கலைக் கழகத்தில் ஒளிப்பதிவு, திரைப்படக் கல்வியில் மூன்றரை வருடம் படித்து விட்டு, சினிமா வாய்ப்புக்காக ஹாலிவுட்டில் போராடி, முதலில் செட் அசிஸ்டெண்டாக வாழ்க்கையைத் தொடங்கியிருக்கிறார். பிறகு உதவி கேமராமேன், ஆப்ரேடிவ் கேமராமேன் என்று உயர்ந்து, இறுதியில் ஒளிப்பதிவு இயக்குனராகியிருக்கிறார்.

"நான் ஒளிப்பதிவு செய்த படங்களின் பட்டியலைத் திரும்பிப் பார்த்தால் எனக்கே தலை சுற்றுகிறது''. என்று தன்னைக் குறித்தே ஆச்சர்யப்படும் மது, ஹாலிவுட்டில் ஒரு இயக்குனராக சாதிக்காமல் இந்தியா திரும்பியது ஏன் என்றால், பிறந்த மண்ணுக்குப் பெருமை சேர்க்க வேண்டும் என்பதுதான் என்கிறார்.

உலகத்தரம் என்பதற்கு மது தரும் விளக்கம்.

''கலாசாரமோ, மொழியோ தடையில்லாமல், உலகம் முழுக்கப் புரிகிற மாதிரி எடுக்க வேண்டும். மற்றபடி கலை சினிமா என்ற கெட்டவார்த்தையை நான் வெறுக்கிறேன்'' என்கிறார் நெத்தியடியாக.

இத்தனை வருடத்தில் நீங்கள் எடுத்த படங்களிலேயே உங்களுக்கு மிகவும் பிடித்த படம் எது என்று கேட்டால், ஓர் இறுக்கமான மௌனத்துக்குப் பின் அவருடைய குரல் உடைகிறது. "சமீபத்தில் நான் எனது கிராமத்துக்குப் போயிருந்தேன். ஒரு பெரியவர், அவர் வீட்டுக்கு என்னை அழைத்துப் போய் ஒரு படத்தை என்னிடம் காண்பித்தார். ஒரு சின்னப் பையனோட படம். இருபது வருஷத்துக்கு முன்னாடி ஊர்ல, ஒரு பாக்ஸ் கேமராவில் நான் எடுத்தது. அந்தப் படத்தை நான் ஆச்சர்யமாகப் பார்க்க, 'இந்தப் படத்துலே இருக்கிறது என்னோட பையன்தான். அவன் இப்ப உயிரோட இல்ல. ஆனா நீங்க எடுத்துக் கொடுத்த படத்தால அவன் இன்னும் வாழ்ந்துக்கிட்டிருக்கான்'னு அழுதார். நான் அதிர்ச்சியில் உறைஞ்சு போயிட்டேன். என் வாழ்க்கையில் நான் எடுத்த மறக்க முடியாத படம் அதுதான்.''

— ஜெயந்த்



# குல்லு மல்லு

—கதிர்



என்ன நான்வெஜ்ஜா?
இன்னைக்கு சன்டே இல்ல.
கருமம்டா...




ஏய்... அசைவம் சாப்பிடறவங்கல்லதான் பலசாலிகள் அதிகம்.
ஏன்...நான்கூட வெஜிடேரியன்தான்.




தெரியும்... ஸ்கூல்லே படிச்சிருக்கேனே... யானைகள் எல்லாம் வெஜிடேரியன்னு...






இங்க ஆட்ட வெட்டுங்க. அங்க புளூகிராஸ்ல பால்காரன், சர்க்கஸ்காரன், எல்லாரையும் திட்டுங்க.




ஏன், நீங்ககூட தக்காளி, வெங்காயமெல்லாம் வெட்டுறீங்க... அது மட்டும் உயிர் இல்லையா?
ஒரு கீரைத் தண்டை நட்டு வெச்சா கீரை வரும். ஒரு ஆட்டுக் காலை நட்டு வெச்சா ஆடு வருமா?




வெட்றதுகூட பரவால்லை. இவங்க கடிக்கறதுதான் தாங்கலை!

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka

# மல்லிகைப் பூ

## காலம் இது

மல்லிகைப் பூ புனிதத் தன்மை தந்து சமநிலையும் அளிக்கும் நறுமணத்தை முகர்வது அவசியம். இதனால் பூமியில் மறைந்து உள்ள அதன் சாரம் இரகசிய உண்மை நாம் கிரகித்துக் கொள்ள முடிகிறது. - சிவமஹா புராணம்

---

மல்லிகைப் பூவினால் அர்ச்சனை செய்தால் எல்லா பாவங்களிலிருந்தும் விடுபடுவான்.

மலர்களை மாலைகளாக தொடுத்து பகவானுக்கு அர்ப்பணம் செய்வது மலர்களால் அர்ச்சிப்பதைவிட எண்ணற்ற மடங்கு பலன் தரும். ஒருவன் தன் சொந்த தோட்டத்திலிருந்து மலர்களை வந்து பகவானுக்கு அர்ப்பணித்தால் அடையும் பலன்களைவிட காட்டிலிருந்து சேகரித்த பூக்களால் அர்ச்சிப்பது மும்மடங்கு பலனைக் காட்டும்.

— அக்னிப் புராணம் —

அத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.



திருமண வைபவங்களுக்கு : சீர் முறுக்கு, சீர்முள்ளுத் தேன்குழல், தேன்குழல், சீர் அதிரசம், அப்பம், திரட்டுப்பால், பருப்புத் தேங்காய் வகைகள் முதலியவை செய்துத் தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை - 20
போன் : 24915662 / 24914213